# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது

நான் எப்பொழுதும்
**டால்டாவையே**
வாங்குகிறேன்.
அது காற்றுப்புகாத
டின்னில் எப்பொழுதும்
புதிதாகவும்,
சுத்தமாகவும்,
ஊட்டமளிப்பதாகவும்
இருக்கிறது.

பள்ளிசெல்லும் சிறுவர்களுக்கு
பிரத்தியேக உணவுகள் தேவையா?
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—
அல்லது என்று வேண்டுமானாலும்
—எழுதுங்கள்:
தி டால்டா அட்வைஸரி ஸர்விஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

தரத்திற்கு டால்டா நிகரற்றது. டால்டா கைபடாமல் மிகவும் சிறந்த மூலப்பொருள்களைக்கொண்டு தயாரிக்கப்பட்டது. டால்டா எப்பொழுதும் சுத்தமாகவும், புதிதாகவும், ஊட்டமளிப்பதாகவும் காற்றுப் புகாத சீல் செய்த டின்னில் உங்களுக்குக் கிடைக்கிறது. மேலும் இது சிக்கனமானதும் கூட.




# டால்டா

10.5.2.1 பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 159-50 TM

# பொருளடக்கம்

மலர் 12 | 1953 மார்ச் 8 | நந்தன ௵
இதழ் 32 | | மாசி 25 உ.



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

ஒரு பெண்ணின்
கண்ணீரில் தோய்த்து
எழுதப்பட்ட
இதயத்தைத்
துடிக்கச் செய்யும்
அற்புதக் கதை




அருணா பிலிம்ஸ், சென்னை-17




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிட்டடி பாப்பா. —பாரதியார். | இதழ் 32

# திருப்தி தரும் திட்டம்

மத்தியதர வகுப்பினரின் கூக்குரல் சர்க்கார் செவிகளில் விழவில்லை என்று இனி யாரும் புகார் கூற முடியாது.

ஏழைகள் விஷயத்தில் சர்க்காருக்குக் கருணை இல்லை என்றும் இனிமேல் யாரும் சொல்ல முடியாது.

விலைவாசிகளின் உயர்வால் மத்தியதர வகுப்பினர் கஷ்டப்படுகிறார்கள் என்ற புகார் நீண்ட நாளாக இருந்து வருகிறது அல்லவா?

அவர்களுடைய கஷ்டம் ஓரளவு குறைவதற்குத் தங்களால் இயன்றதைச் செய்ய இப்போது சுதந்திர இந்திய சர்க்கார் முன் வந்திருக்கிறார்கள்.

ஏற்கெனவே வருஷத்தில் 3600 ரூபாய்க்கு மேல் வருமானம் உள்ளவர்கள் வருமான வரி செலுத்த வேண்டும் என்றிருந்தது. அந்தத் தொகையை இப்போது 4200 ரூபாயாக உயர்த்தி யிருக்கிறார்கள். அதாவது 4200 ரூபாய் வருமானத்துக்குக் குறைந்தவர்களுக்கு வருமான வரி கிடையாது.

அதுபோலவே, அவிபக்த ஹிந்து குடும்பங்கள் சம்பந்தப்பட்ட வரையில் வருமான வரி விலக்குத் தொகையை ரூ. 7200 லிருந்து ரூ. 8400 ஆக உயர்த்தி யிருக்கிறார்கள்.

இந்திய சர்க்கார் நிதிமந்திரி ஸ்ரீ சி. டி. தேஷ்முக் பார்லிமெண்டில் சமர்ப்பித்துள்ள 1953-54-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தில் மேற்படி திருப்திகரமான அம்சங்கள் அடங்கி யிருக்கின்றன.

இதைத் தவிர, ஏழைகளுக்குத் திருப்தியைக் கொடுக்கக் கூடிய வகையிலும் அத் திட்டம் அமைந்திருக்கிறது என்று கூறலாம்.

ஏழைகளைப் பாதிக்கக் கூடிய புதிய வரிகள் எதுவும் விதிக்காதது மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய விஷயம் அல்லவா?

* * * *

பிரஸ்தாப வரவு செலவுத் திட்டத்தின்படி சர்க்காரின் வருமானம் 437·76 [redacted]

இதிலிருந்து இரண்டு விஷயங்கள் வெளியாகின்றன.

1. சர்க்கார் இனி அதிக விலைக்கு வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்யப் போவதில்லை.

2. இந்தியாவில் உணவுப் பொருள்களின் உற்பத்தி அபிவிருத்தி அடைந்திருக்கிறது.

* * *

நிதி நிபுணரான டாக்டர் ஜான் மத்தாய் தலைமையில் வரி விசாரணைக் கமிட்டியை அமைக்க நிதி மந்திரி தீர்மானித்திருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

அதன் பலனாக வரி முறையில் உள்ள பல குறைகளும் ஏற்றத் தாழ்வுகளும் மறைய வழி பிறக்கலாம்.

அவ்விதம் மறைந்து அபித சொத்து வரி அல்லது வார்சு உரிமை வரி போன்ற வரிகள் அமுலுக்கு வருமாயின், ஏழைகளுக்கும் மத்தியதர வகுப்பினருக்கும் பரிகாரமாகப் பல வரிகளைக் குறைப்பது சாத்தியமாகும்.

சகல ஜனநாயக தேசங்களிலும் அபித சொத்து வரிகள் அமுலில் இருந்து வருகின்றன என்பது குறிப்பிடத் தக்கது.

இந்திய சர்க்காரின் வருஷாந்திரச் செலவான 439 கோடி ரூபாயில் 200 கோடி ரூபாய் இராணுவச் செலவுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இன்றைய உலகத்தின் கொந்தளிப்பான நிலைமையில், சிறிய நாடுகளிலிருந்து வல்லரசுகள் வரையில் இராணுவத்தைப் பெருக்காத தேசமே இல்லை.

பாரத நாட்டின் இராணுவச் செலவு என்பது உண்மையில் பாரத நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் செலவே ஆகும்.

பாகிஸ்தான் தலைவர்களின் போர் வெறிப் பிரசங்கங்களைப் பார்க்கும்போது, இந்தியாவின் இராணுவச் செலவைக் குறை கூறுவதற்கில்லை.

பாரதநாடு கோடிக்கணக்கான செலவில் பல்வேறு ஆக்கத் திட்டங்களையும் ஐந்து வருஷத் திட்டத்தையும் கைக் கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும் வரவையும் செலவையும் சரிக்கட்டும் முறையில் நிதிமந்திரி தமது திட்டத்தைத் தயாரித்திருப்பது பாரத நாட்டின் திருப்திகரமான நிதி நிலைமையைக் காட்டுகிறது.

# கயிறு திரிப்போர் செய்த பேருதவி

நமது மதிப்பிற்குரிய தலைவர்கள் பலர் சில சமயம் பத்திரிகை நிருபர்களைப் பற்றிக் குறை கூறுவதுண்டு. அவர்களுடைய கயிறு திரிக்கும் பணியைப் பற்றிக் குற்றம் சொல்லிக் கண்டிப்பதும் உண்டு. "புது டில்லி வட்டாரங்களில் இன்னின்னபடி பேச்சு நடந்து வருகிறது!" என்று தினப் பத்திரிகைகளில் வரும் செய்திகளைப் படிக்கும் பொது மக்களில் பலர் அவற்றை நம்புவதில்லை. பத்திரிகை நிருபர்கள் திரிக்கும் சரடு என்றே எண்ணுவார்கள்.

ஆனால் நீதிபதி வாஞ்சுவின் அறிக்கை சம்பந்தமாகப் புது டில்லி பத்திரிகை நிருபர்கள் தமிழ் மக்களுக்குச் செய்த பேருதவியை நாம் என்றென்றும் மறக்க முடியாது. முன்னெல்லாம் அவர்கள் கயிறு திரித்தது, சரடு விட்டது எல்லாவற்றுக்கும் சேர்த்து இதன் மூலம் பரிகாரம் செய்து விட்டார்கள் என்பதை நம் தலைவர்களும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

வாஞ்சுவின் அறிக்கை இம்மாதிரி போக்கில் அமைந்திருக்கிறது என்பதை அவர்கள் முன் கூட்டித் தகவல் அறிந்து வெளியிட்டிரா விட்டால் நம் தலைவர்கள் இன்னும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டுதா னிருப்பார்கள். திடுக்கிட்டு எழுந்து, நிலைமை மீறிப் போய்விட்டது என்பதைக் கண்ட பிறகு, பேந்தப் பேந்த விழிப்பார்கள்!

இன்றைக்குப் புது டில்லியில் ஆந்திர ராஜ்யத்தின் தலைநகரப் பிரச்னை காங்கிரஸ் மேலிடத்தோரால் யோசிக்கப்பட்டு வருகிறது. அதன் முடிவு என்ன ஆகும் என்று சொல்லுவதற்கில்லை.

ஆந்திர ராஜ்யத்தின் விருந்தாளித் தலைநகராகும் பெரிய விபத்திலிருந்தும், அதிலிருந்து விளையக் கூடிய பல் வேறு தொல்லைகளிலிருந்தும் சென்னை நகரம் தப்பிப் பிழைத்ததானால், அதற்கு நாம் புது டில்லிப் பத்திரிகை நிருபர்களுக்கே முழுதும் கடமைப் பட்டவர்களாவோம்.

* * *

சென்ற வாரத்தில் சென்னை நகரில் நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் ஸ்ரீ சிவஞான கிராமணியார் "ராஜாஜியை நம்புங்கள்! காமராஜரை நம்புங்கள்!" என்று கேட்டுக் கொண்டதாகப் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. காங்கிரஸ் விரோதிகளின் விஷமப் பிரசாரத்தை மறுக்கும் முறையிலேயே ஸ்ரீ கிராமணியார் இவ்விதம் பேசியிருப்பார் என்று கருதுகிறோம்.

"தலைவர்களை நம்புங்கள்!" என்று நாமும் சொல்லுகிறோம். ஆனால் கூடவே "தலைவர்களை மட்டும் நம்பியிருந்து விடவேண்டாம்!" என்றும் பொது மக்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

இந்த ஜனநாயக யுகத்தில் பொது ஜனங்களின் அபிப்பிராய பலமின்றித் தலைவர்களினால் மட்டும் எதையும் சாதித்துவிட முடியாது. அதிலும் சென்னை நகர உரிமை போன்ற பிரச்னையில் பொது மக்களின் உணர்ச்சி இப்படியிருக்கிறது என்பதைத் தெரியப்படுத்தாவிட்டால், தலைவர்களின் முயற்சியினால் எதுவும் கை கூடாது.

எந்தத் தலைவராவது "பொது ஜனங்களே! சும்மா இருங்கள்! நாங்களே எல்லாவற்றையும் சாதித்து விடுகிறோம்!" என்று கூறினால், அந்தத் தலைவருக்குப் பிரச்னை இத்தகைய தென்பதே புரியவில்லை என்று தான் கொள்ள வேண்டும்.

* * *

நீதிபதி வாஞ்சு வந்திருந்த சமயத்தில் நமது தலைவர்கள் கொஞ்சம் அசமந்தமா யிருந்து விட்டார்கள் என்பது இப்போது வெட்ட வெளிச்சமாகி யிருக்கிறது.

வாஞ்சு சென்னையில் வந்து இறங்கியபோதே இங்குள்ள ஆந்திரர்கள் "மதராஸ் மனதே" என்ற கோஷத்துடன் அவரை வரவேற்றார்கள். பிறகு ஆந்திர ஜில்லாக்களில் ஒவ்வொரு இடத்திலும் சென்னை நகரில் ஆந்திரர்களுக்குள்ள உரிமையை வற்புறுத்தினார்கள். "ஆந்திரத் தலை நகரம் கொஞ்ச காலமாவது சென்னையில் இருக்க வேண்டும்" என்ற பாடத்தையும் ஒப்பித்தார்கள்.

இவ்வளவையும் பார்த்த பின்னரும் நம் தலைவர்கள் விழித்துக் கொள்ளவில்லை. ஆந்திர சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு வாஞ்சு

சென்னைக்குத் திரும்பி வந்தபோது கூட இங்கே தமிழ் மக்களின் உணர்ச்சி எப்படி யிருக்கிறது என்பதை அவருக்கு எடுத்துக் காட்டுவதற்கு எந்த விதமான ஏற்பாடும் செய்யவில்லை.

நேரு சர்க்காரின் முடிவு வெளியான பின்னர் "உலகம் இதுவரை காணாத மகத்தான கிளர்ச்சியை நடத்துவோம்" என்று பறை சாற்றுவது காங்கிரஸ் வாதிகள் மகிழக் கூடியதுமல்ல; பெருமைப் படக் கூடியதுமல்ல.

ஏதோ புது டில்லிப் பத்திரிகை நிருபர்கள் செய்த உதவியினால் தமிழ் மக்கள் வரப்போகும் அபாயத்தை உணர்ந்து தங்கள் உணர்ச்சியை வெளிப்படுத்தலானார்கள். தலைவர்களும் விழித்தெழுந்து முயற்சி தொடங்கினார்கள்.

புது டில்லி பார்லிமெண்டில் ஸ்தானம் வகிக்கும் ஆந்திரரல்லாத சென்னை அங்கத்தினர் 32 பேர் கையொப்பமிட்டு மார்ச்சு 2உ நேருஜியிடம் ஒரு மகஜரும் சமர்ப்பித்திருக்கிறார்கள். அசைக்க முடியாத வாதங்களுடன் அந்த மகஜர் ஆக்ரோஷமான பாஷையில் அமைந்திருக்கிறது.

இவ்வாறு சிறிது காலப் பிற்பாடாகவேனும் நம் தலைவர்களும் பிரதிநிதிகளும் முயற்சி தொடங்கி நடத்தி வருவதற்குப் புது டில்லி பத்திரிகை நிருபர்களே காரணமாவார்கள்.

அவர்களுடைய கயிறு திரிக்கும் பணிக்கும் சரடு விடும் தொண்டுக்கும் பல்லாண்டு கூறுவோமாக!

நம் தலைவர்களின் முயற்சி பூரண பலனளிக்கட்டும் என்றும் பிரார்த்திப்போமாக!

# ‘லெவி’ கொள்முதல் முறையின் லாப நஷ்டம்

சென்னை இராஜ்யத்தில் உள்ள இருபத்தைந்து ஜில்லாக்களிலும் இப்போது கட்டாயக் கொள்முதல் முறை அமுலில் இல்லை. கட்டாயக் கொள்முறையின் கீழ் விவசாயிகள் பட்ட கஷ்ட நஷ்டங்கள் இவ்வளவு அவ்வளவு அல்ல. ஆகையால் அந்த முறை இந்த மாகாணத்தில் எங்கும் இன்றைய தினம் அமுலில் இல்லாதது பற்றி மகிழ்ச்சி அடைய வேண்டும்.

உபரி நெல் விளைச்சல் உள்ள ஐந்து ஜில்லாக்களிலே மட்டும் இந்த வருஷம் ‘லெவி கொள்முதல்’ முறை அமுலில் இருந்து வருகிறது.

இந்த ஐந்து ஜில்லாக்களில் தமிழ் நாட்டில் உள்ளது தஞ்சை ஜில்லா ஒன்றுதான்.

கரித்து விடமுடியாது. ‘லெவி’ கொள்முதல் முறையில் உள்ள லாப நஷ்டங்களைச் சர்க்கார் சீர்தூக்கிப் பார்த்து அவசியமான மாறுதல்களைச் செய்ய வேண்டும்.

* * *

சுயநலம் காரணமான சில அர்த்தமற்ற புகார்களைப் பெரிய மிராசுதார்களும் வீண் வம்புக்காரர்களும் கிளப்புகிறார்கள்.

"தஞ்சை ஜில்லாவுக்கு மட்டும் ஏன் ‘லெவி’ விதிக்க வேண்டும்! பக்கத்திலுள்ள சிதம்பரம் தாலூக்காவுக்கு ஏன் விதிக்கக்கூடாது! திருச்சி ஜில்லாவில் காவேரிப் பாசனமுள்ள நிலங்களுக்

[redacted]

இதனால், லெவிக்கு உள்ளாகும் மிராசுதார்கள் வயிற்றெரிச்சலுக்கும் உள்ளாகிறார்கள்.

"அவர்கள் வயிறு எரிந்தால் கொஞ்சம் எரியட்டுமே; பத்து வருஷத்துக்கும் முன்னால் கலம் இரண்டு ரூபாய்க்கு விற்றவர்கள் இப்போது ஏழு ரூபாய்க்கு ஏன் மூக்கால் அழவேண்டும்!" என்று எளிதில் சொல்லி விடலாம்.

ஆனால் மேற்படி விலை வித்தியாசத்தினால் இன்னொரு பெரிய தீமையும் ஏற்படுகிறது.

தஞ்சாவூர் ஜில்லாவில் வசிக்கும் எல்லாருமே நிலம் படைத்தவர்கள் அல்ல. ரூபாய் சம்பளம் பெறுகிற சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், பென்ஷன்தாரர்கள், உபாத்தியாயர்கள், வியாபாரிகள், கடை குமாஸ்தாக்கள், வக்கீல்கள், ஆலைத் தொழிலாளிகள்,—இப்படி எத்தனையோ ஆயிரமாயிரம் ஜனங்கள் பணம் கொடுத்து நெல் வாங்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள். நெல்லின் விலை விஷம் போல் ஏறுவதைக் காணக் காண அவர்களுக்கும் பீதி ஜுரம் ஏற்கொண்டு வருகிறது.

* * *

"உங்கள் சென்னை இராஜ்யத்திலும் ஓரளவு கொள் முதல் செய்தாக வேண்டும். அப்போது தான் மற்ற இராஜ்யங்களிலிருந்து உங்களுக்கு தானியம் அனுப்ப முடியும்" என்று மத்திய சர்க்கார் சென்னை சர்க்காரை வற்புறுத்தி வது அனைவரும் அறிந்த விஷயம்.

அதற்காகவே இந்த வருஷம் 'லெவி' கொள் முதல் முறையை நாலு ஜில்லாக்களில் சென்னை சர்க்கார் அமுல் நடத்துகிறார்கள்.

ஜில்லாக்களில் நெல் விலை கண்டபடி ஏறுமலிருப்பதற்குத் தக்க முன் ஏற்பாடு செய்வது அவசியம்.

ஒரே பிரதேசத்தில் ஒரே காலத்தில் ஒரு பொருளுக்கு இரு வித விலைகள் அமுலில் இருப்பதினால் சம்பந்தப்பட்ட அனைவரும் மனக் கசப்பு அடைய இடம் ஏற்படுகிறது. இவ்விதம் நேரிடாமலிருக்க வகை செய்ய வேண்டும்.

'லெவி' கொள்முதலுக்கு ஒரு கால வரம்பை ஏற்படுத்தி, அந்தக் காலவரம்பு முடியும் வரையில் வெளி ஜில்லாக்களுக்கு நெல் அனுப்புவதைக் கட்டுப் படுத்துவதினால் மேற்கூறிய தீமை நேராமல் தடுத்து விடலாம்.

ஜனவரி முதல் தேதி ஆரம்பித்து மார்ச்சு 31உக்குள் 'லெவி' முறையின் மூலம் கொள்முதல் செய்து முடித்து விடவேண்டும்.

இந்த மூன்று மாத காலமும் வெளி ஜில்லாக்களிலிருந்து வியாபாரிகள் வந்து 'லெவி' ஜில்லாக்களில் இஷ்டம்போல் நெல் வாங்குவதைத் தடை செய்ய வேண்டும்.

இப்படிச் செய்தால், அந்த மூன்று மாதமும் ஜில்லாவிற்குள் நெல்லின் விலை வித்தியாசம் அதிகமாக ஏற்பட இடமில்லை.

மற்ற ஒன்பது மாதமும் தடையின்றி நெல் விற்பனைக்கு இடம் கொடுத்து விட்டால், இராஜ்யம் முழுவதிலும் பரவியுள்ள விலை நிலவரத்தின் படியே 'லெவி' ஜில்லாக்களிலும் நெல்லின் விலை நிலவரம் அடையும். அப்போது விவசாயிகளும் சரி, ஜில்லாவுக்குள் நெல் வாங்கிச் சாப்பிடுவோரும் சரி, மனக் கசப்பு அடைய இடமிராது.

# பொன்னியின் செல்வன்

கல்கி

அத்தியாயம் 45

## "நீ என் சகோதரி!"

நந்தினியும் வந்தியத்தேவனும் நின்ற இடத்தை அணுகி இளவரசரும் மணிமேகலையும் வந்து சேர்ந்தார்கள்.

அருகில் வரும் வரையில் இளவரசர் வந்தியத் தேவனை நோக்கிய வண்ணம் வந்தார். கிட்ட வந்ததும் நந்தினியை ஏறிட்டுப் பார்த்தார். அவனுடைய

"தங்காய்! இந்த மாதிரி காயங்கள் எனக்குச் சர்வ சாதாரணம். எத்தனையோ காயங்கள் பட்டு ஆறி யிருக்கின்றன. நெஞ்சில் படும் காயத்தை ஆற்ற ஏதாவது அஞ்சனம் இருக்கிறதா, சொல்!" என்றான்.

"ஓ! இருக்கிறது. அக்கா! அதுவும்

செல்வன்

கல்கி

அத்தியாயம் 45

"நீ என் சகோதரி!"

நந்தினியும் வந்தியத்தேவனும் நின்ற இடத்தை அணுகி இளவரசரும் மணிமேகலையும் வந்து சேர்ந்தார்கள்.

அருகில் வரும் வரையில் இளவரசர்

"தங்காய்! இந்த மாதிரி காயங்கள் எனக்குச் சர்வ சாதாரணம். எத்தனையோ காயங்கள் பட்டு ஆறி யிருக்கின்றன. நெஞ்சில் படும் காயத்தை



அவர்கள் வந்ததும் சொல்லிக் கொண்டு புறப்படலாம்'' என்றார் இளவரசர்.

சற்று நேரத்துக்கெல்லாம் நந்தினியும் மணிமேகலையும் புதிய ஆடைகள் அணிந்து அலங்கரித்துக் கொண்டு வந்தார்கள். நந்தினியின் கன்னத்திலும் தோளிலும் இரத்தக் காயம் தெரியாதபடி அஞ்சனம் தடவியிருந்தது.

''உங்களிடம் விடை பெற்றுக் கொண்டு போவதற்காகக் காத்திருக்தோம்'' என்றார் கரிகாலர்.

''நன்றாயிருக்கிறது. உச்சி வேளைக்கு மேலாகி விட்டது. எங்களுடன் இருந்து உணவருந்தி விட்டுத்தான் போக வேண்டும். இந்த நேரத்தில் உங்களைப் போக விட்டு விட்டால், சம்புவரையர் மகள் என்னை மன்னிக்கவே மாட்டாள்'' என்றாள் பழுவூர் ராணி.

''ஒரு நிபந்தனையின் பேரில் இருக்கிறோம். உங்களுடைய காயத்துக்கு அஞ்சனம் தடவியிருக்கிறாள் மணிமேகலை. நெஞ்சத்தின் காயத்துக்கும் ஏதோ அஞ்சனம் இருக்கிறது என்று சொன்னான் அல்லவா? அது என்ன அஞ்சனம் என்பதைத் தெரிவித்தால் இருக்கிறோம்'' என்றார் கரிகாலர்.

''அவனைக் கேட்காமல் நாமே அதை ஊகித்துச் சொல்லப் பார்க்கலாமே?'' என்றாள் நந்தினி.

''ஒரு வேளை காலப் போக்கினால் ஏற்படும் மறதியைச் சொல்லியிருக்கலாம்'' என்றார் கரிகாலர்.

''அதுவாக இருக்க முடியாது. காலப் போக்கினால் மாறாத நெஞ்சப் புண்ணும் உண்டு அல்லவா?'' என்றாள் நந்தினி.

''பெண்களின் விஷயத்தில் நெஞ்சப் புண்ணுக்கு ஒரு நல்ல அஞ்சனம் இருக்கிறது! அதுதான் கண்ணீர்!'' என்றான் வந்தியத்தேவன்.

''பெண்களைக் கேவலப்படுத்தச் சந்தர்ப்பம் எப்போது கிடைக்கும் என்று வல்லத்து இளவரசர் காத்திருக்கிறார். ஆனால் அவர் சொல்வதும் சரியல்ல. சில விதமான நெஞ்சக் காயங்கள் ஏற்பட்டு விட்டால் கண்ணீர் விடும் சக்தியே போய் விடுகிறது. பிறகு அது அஞ்சனமாக எவ்விதம் பயன்படக் கூடும்?'' என்றாள் நந்தினி.

''நாங்கள் இருவரும் சொன்னது சரியில்லையென்றால், நீங்கள் உங்கள் ஊகத்தைச் சொல்லுங்கள்!'' என்றான் வந்தியத்தேவன்.

''அதற்கென்ன, சொல்லுகிறேன். தங்காய்! நீ குறிப்பிடும் அஞ்சனம் செவியின் மூலமாக நெஞ்சுக்குப் போவதல்லவா? யாழிலும், குழலிலும், இனிய குரலிலும் எழும் இன்னிசையைத்தானே நெஞ்சின் காயத்துக்கு அஞ்சனம் என்று சொல்கிறாய்?'' என்றாள் நந்தினி.

''ஆம், அக்கா! உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று மணிமேகலை கேட்டாள்.

''நான்தான் மந்திரக்காரி என்று சொல்லியிருக்கிறேனே? பிறர் மனத்தில் உள்ளதை அறியும் சக்தி எனக்கு உண்டு. ஐயா! நீங்கள் இருவரும் இன்னிசையின் அந்த அபூர்வ சக்தியை ஒப்புக்கொள்கிறீர்களா?'' என்று நந்தினி கேட்டாள்.

''ஆம், ஆம்! அதை ஊகிக்க முடியாமற் போனது எங்கள் தவறு என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். மணிமேகலை இசைக் கலையில் தேர்ந்தவள் என்றும் நன்றாக யாழ் வாசிப்பாள் என்றும் கந்தமாறன் கூறியதும் நினைவு வருகிறது'' என்றார் கரிகாலர்.

''தமையன் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்? தங்கையின் புகழை யாரிடமாவது சொல்லாத நாளெல்லாம் கடம்பூர் இளவரசருக்குப் பிறவாத நாள் போலிருக்கிறது. மணிமேகலையின் இசைத் திறனைப் பற்றி அவர் கூறியது

உண்மைதான். மணிமேகலை யாழ்கூட எடுத்து வந்திருக்கிறாள். கான வித்தையின் மகிமை அறியாத என்னை மட்டும் வைத்துக்கொண்டு பாடவேண்டிய நிர்ப்பந்தம் நல்ல வேளையாக அவளுக்கு இன்று இல்லை. ஐயா! பேதைப் பெண்களாகிய எங்களை இன்று புலிக்கு உணவாகாமல் காப்பாற்றினீர்கள். அதற்கு நன்றி நாங்கள் செலுத்த வேண்டாமா? எங்களுடன் உணவருந்தி விட்டு மணிமேகலையின் இசை அமுதையும் அருந்தி விட்டுத்தான் போக வேண்டும்" என்று வற்புறுத்தினாள் நந்தினி.

வந்தியத்தேவன் அதற்கு இணங்க வேண்டாம் என்று இளவரசருக்குச் சமிக்ஞை செய்தான். அதை அவர் கவனிக்கவே யில்லை.

"இளவரசிகளின் சித்தம் எங்கள் பாக்கியம்" என்றார் கரிகாலர்.

"மணிமேகலை! உன் மனோரதம் நிறைவேறிவிட்டது. சமையல் ஆகிவிட்டதா என்று போய்ப் பார்! இல்லாவிடில், சற்று துரிதப்படுத்து" என்று ஏவினாள் நந்தினி.

மணிமேகலை உடனே எழுந்து சமையல் நடந்த இடத்தைநோக்கிச் சென்றாள்.

அதே சமயத்தில் வந்தியத் தேவனும் எழுந்து நின்று கொண்டு சுற்று முற்றும் பார்த்தான்.

அதை நந்தினி கவனித்து விட்டு, "சற்று முன் பிறருடைய மனத்தில் உள்ளதை அறியும் மந்திர சக்தி எனக்கு உண்டு என்று சொன்னேன் அல்லவா! அதை இப்போது பரீட்சை பார்க்க விரும்புகிறேன். வல்லத்து இளவரசரின் மனதில் இப்போதுள்ள எண்ணத்தைச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

கரிகாலர் சிரித்துக்கொண்டே "சொல்லுங்கள், பார்க்கலாம்!" என்றார்.

"அந்தப் புலியைக் கொன்று இந்தப் பெண்களைக் காப்பாற்றியது பெருந்தவறு என்று பச்சாத்தாபப்பட்டுக் கொண்டிருக்கிறார். இவர்கள் இருவரும் அந்தப் புலியின் வயிற்றுக்குள் போயிருந்தால் மிக்க நன்றாயிருக்கும் என்று எண்ணுகிறார்."

கரிகாலர் மேலும் சிரித்துக்கொண்டே "நண்பா! நீ அப்படி எண்ணுகிறாயா?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! அப்படி நான் எண்ணவில்லை. ஆனால் புலியைப் பற்றியும் இவர்களைப் பற்றியும் எண்ணியது உண்மைதான். இவர்களிடம் அகப்பட்டுக்



கொண்ட புலி எப்படி உயிரோடு தப்பிப் பிழைத்தது என்று ஆச்சரியப் பட்டுக் கொண்டிருக்கிறேன்!" என்றான்.

"என்ன, தம்பி! உளறுகிறாய்? புலி தப்பிப் பிழைத்ததா? மறுபடியுமா? செத்த புலியின் உடல் தண்ணீரில் மிதந்ததே! அது எங்கே?" என்று இளவரசரும் எழுந்து நின்று கேட்டார்.

"அதோ பாருங்கள்!" என்று வந்தியத்தேவன் சுட்டிக் காட்டினான்.

அவர்கள் இருந்த இடத்திலிருந்து கூப்பிடு தூரத்தில் மரக்கிளைகளின் இடையில் தண்ணீர்க் கரை தெரிந்தது. அங்கே இளவரசிகள் வந்த படகு கட்டிப் போட்டிருந்தது. அந்தப் படகின் முனையை முன்னங் கால்களினால் பற்றிக் கொண்டு சிறுத்தை படகில் ஏற முயன்று கொண்டிருந்தது.

"ஆகா! இந்தப் புலியின் உயிர் வெகு கெட்டி!" என்றார் கரிகாலர்.

"ஐயா! வாருங்கள், போய் அதைக் கொன்று விட்டு வரலாம். காயம் பட்ட புலியை உயிரோடு விடுவது தவறு!" என்றான் வல்லவரையன்.

"வாணர் குலத்து வீரரே! நீங்கள் இரண்டு வீரர்கள் ஒரு காயம் பட்ட புலிக்காக ஏன் சிரமப்பட வேண்டும்? மணிமேகலையைக் கூப்பிடுகிறேன். அவள் தன் கையில் உள்ள சிறிய கத்தி

யினுல் புலியைக் கொன்று விட்டு வருவான்!'' என்ருள் நந்தினி.

''பார்த்தாயா, நண்பா! பழுவூர் ராணி நமது வீரதீரத்தைக் குறித்து அவ்வளவு பெருமதிப்பு வைத்திருக்கிருர். நானும் வரவேண்டுமா? நீ மட்டும் போய் வருகிருயா?'' என்ருர் கரிகாலர்.

''அல்லது மணிமேகலையை அனுப்பலாமா?'' என்ருள் நந்தினி.

''மணிமேகலையை அனுப்பலாம். ஆனுல் அந்தப் பெண் ஒரு வேளை காயம்பட்ட புலிக்கும் அஞ்சனம் தடவிப் பிறைக்க வைத்துக் கொண்டு வந்து விட்டால் என்ன செய்கிறது?'' என்று வந்தியத்தேவன் முணுமுணுத்தான்.

''என்ன யோசிக்கிருய்?'' என்ருர் இளவரசர்.

''காயம்பட்ட புலியின் தலையை வெட்டிக் கொண்டு வந்து பழுவூர் அரசியின் காலடியில் சமர்ப்பிக்கலாமா என்று

ணீருமாக நின்று என்னிடம் ஒரு வரம் கேட்டாய். அதை நான் கொடுக்கவில்லை. அந்தச் சமயம் ஏதோ வெறி கொண்டிருந்தேன். அதை யெல்லாம் நான் இன்னமும் மறக்கவில்லைதான். ஆனுல் எதற்காக ஓலை கொடுத்து அனுப்பினுய்? எதற்காக என்னை இவ்விடம் வரச்சொன்னுய்?'' என்று கேட்டார் இளவரசர்.

''ஐயா! தஞ்சாவூருக்குத் தாங்கள் மூன்று ஆண்டுகளாக வரவில்லை. நோய்ப்பட்டிருக்கும் தங்கள் தந்தையைப் பார்க்கவும் வரவில்லை ......''

''அவர் எனக்கு மட்டும் தந்தை அல்ல, நந்தினி!......''

''ஆம், இளையபிராட்டிக்கும் தந்தைதான்! பொன்னியின் செல்வருக்கும் தந்தைதான்! ஆயினும் தங்களைப் பார்க்காததுதான் தங்கள் தந்தைக்குப் பெருங்குறையாக இருக்கிறது. தாங்கள் வராமை [illegible]

"இல்லை, இல்லை! நீ தவறாக எண்ணுகிறாய்! எனக்கு அந்த எண்ணமே கிடையாது. உனக்கு நான் முன்னம் செய்த குற்றமெல்லாம் போதும். பழுவூர் அரண்மனையிலிருந்து உன்னைத் துரத்திய பாதகத்தையும் நான் சேர்த்துக் கட்டிக்கொள்ள வேண்டாம்......"

"ஐயா! நாம் இருவரும் தஞ்சையில் இருக்க முடியாதா? அந்தப் பெரிய நகரில் நாம் இரண்டு பேரும் இருக்க இடம் இல்லையா? ஒருவரை யொருவர் பார்க்க வேண்டிய அவசியங்கூட இல்லையே?"

"பார்க்க வேண்டிய அவசிய மில்லாமலிருக்கலாம். ஆனால் மனத்தில் நினைக்காமல் இருக்க முடியுமா? சற்று முன் நீதான் சொன்னாய்! சென்று போனதையெல்லாம் மறக்க முடியாது என்று. உன் நெஞ்சத்திலுள்ள காயத்தைப் பற்றியும் சொன்னாய். என் நெஞ்சத்திலும் காயம் பட்டிருக்கிறது. என்னாலும் மறக்க முடியவில்லை."

"மறக்க முடியாமல் இருக்கலாம். ஆனால் மன்னிக்க முடியாதா? நான் செய்த குற்றங்களை இத்தனை காலங் கழித்த பிறகும் மன்னிக்க முடியாதா?"

"நந்தினி! நான் மன்னிக்கும்படியாக நீ ஒரு குற்றமும் செய்யவில்லை. குற்றம் செய்தவன் நான். உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டியவன் நான். காஞ்சியிலிருந்து புறப்பட்டபோது கூட உன்னிடம் மன்னிப்புக் கேட்டுப் பெறலாம் என்ற எண்ணத்துடன் கிளம்பினேன். ஆனால் வழியில் நான் அறிந்த ஒரு செய்தி உன்னிடம் மன்னிப்புக் கேட்கவே என்னைத் தகுதியற்றவன் ஆக்கி விட்டது."

"கோமகனே! தாங்கள் என்னிடம் மன்னிப்புக் கேட்பது எந்த வகையிலும் தகுதியற்றதுதான். தாங்கள் புவி ஆளும் சக்கரவர்த்தியின் திருக்குமாரர். நான் பெற்ற தாய் தந்தையரால் கை விடப்பட்ட அநாதைப் பெண்......"

"இல்லை, நந்தினி! நீ அநாதைப் பெண் அல்ல......"

"தனாதிகாரி பழுவேட்டரையர் என்னை மணமுவந்து தம் இளையராணியாக அங்கீகரித்தார். ஆனாலும்......"

"அது மட்டுமல்ல, நந்தினி! எப்படி உன்னிடம் உண்மையைச் சொல்வது என்று தயங்குகிறேன்......"

"இந்தப் பேதைப் பெண்ணிடம் தாங்கள் எதை வேணுமானாலும் தயங்காமல் சொல்லலாம். வழியோடு போகிறவர்கள் எல்லாரும் என்னிடம் ஏதேதோ சொல்லத் துணிகிறார்கள். என்னை வம்புக்கு இழுத்து அவமதிக்கிறார்கள்......"

"நந்தினி! இனி அவ்விதம் யாரேனும் நடந்து கொண்டால் என்னால் ஒரு கணமும் பொறுக்க முடியாது. நீ சொல்ல வேண்டியதுதான். அவனை உடனே யமனுலகுக்கு அனுப்பிவிட்டு மறு காரியம் பார்ப்பேன்......"

"எப்போதும் என்னிடம் தாங்கள் அத்தகைய கருணை காட்டி வந்திருக்கிறீர்கள். பழையாறை இளையபிராட்டியோடு கூட எனக்காகச் சிறு பிராயத்தில் சண்டை பிடித்திருக்கிறீர்கள். அவர் தங்கள் சகோதரி......"

"நந்தினி! நீயும் என் சகோதரிதான்! இளைய பிராட்டியைப் போல நீயும் என் சகோதரி; நான் உன் சகோதரன்!"

"கோமகனே! நான் இன்னொருவரை மணந்ததிலிருந்து என்னைத் தங்கள் சகோதரியாகப் பாவிக்கிறீர்கள். அது தங்கள் குலத்தின் பெருமைக்கு உகந்ததுதான். ஆனால் சக்கரவர்த்தியின் திருக்குமாரரை, மூவுலகும் ஆளப் பிறந்தவரை, நான் எவ்வாறு என் சகோதரராகக் கருத முடியும்......?"

"நான் சொல்வதை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை, நந்தினி! உண்மையாகவே நீ என் சகோதரி; மூவுலகும் ஆளும் சக்கரவர்த்தியின் திருக்குமாரி......!"

இதைக் கேட்ட நந்தினி கல கலவென்று சிரித்தாள்.

"தங்களுடைய சித்தம் குழம்பியிருக்கிறதா, எனக்குத்தான் பைத்தியம் பிடித்திருக்கிறதா, தெரியவில்லை!" என்று கூறினாள்.

"சித்தப் பிரமையும் இல்லை; பைத்தியமும் இல்லை."

"அப்படியானால், இந்தப் பேதையைப் பரிகாசம் செய்கிறீர்களா?"

"என்னைப் பார்த்துச் சொல், நந்தினி! உண்மையாகவே உன்னைப் பரிகசிப்பவனாகத் தோன்றுகிறதா?"

"ஐயா! தாங்கள் என் முகத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்! என்னைப் பார்த்தால், சக்கரவர்த்தியின் திருக்குமாரி என்று தோன்றுகிறதா? இராஜகுலத்தின் இலட்சணம் என் முகத்திலே விளங்குகிறதா?"

"நந்தினி! நீ ஐந்து வயதுப் பெண்ணாக இருந்தது முதல் உன் முகத்தைப் பார்த்திருக்கிறேன். உன் முகத்தில் ஜொலித்த இணையில்லாத சௌந்தரியத்தைக் கண்டு வியந்திருக்கிறேன். அதற்-

குக் காரணம் மட்டும் இப்போதுதான் தெரிந்தது. காஞ்சியிலிருந்து புறப்பட்ட பிறகு நடுவழியிலேதான் தெரிந்தது. சோழ குலத்தில் வாழ்க்கைப் பட்டவர்களிலே வைதும்பராஜன் மகள் கல்யாணிக்கு இணையான அழகுடையவர் யாரும் இல்லை என்பது உலகப் பிரசித்தம். அவர் என் பாட்டி. இன்னமும் பழையாறையில் உயிரோடு இருந்து வருகிறார். எழுபது வயது ஆன பிறகும் அவர் முகத்தில் விளங்கும் தெய்வீகமான அழகு கண்களைக் கூசச் செய்யும். அவருடைய அழகெல்லாம் இப்போது உன்னிடந்தான் தஞ்சம் புகுந்திருக்கிறது. அது என்னிடம் இல்லை; இளையபிராட்டியிடம் இல்லை; அருள்மொழியிடமும் இல்லை. என் தந்தையின் மூலமாக உன்னிடத்தேதான் வந்திருக்கிறது......"

"ஐயா! இது என்ன சொல்கிறீர்கள்? உண்மையிலேயே எனக்குச் சித்தக் கோளாறுதான் போலிருக்கிறது. அல்லது என் காதுகளில் ஏதேனும் கோளாறு இருக்க வேண்டும்......"

"இல்லை, நந்தினி, இல்லை! சித்தக் கோளாறும் இல்லை; உன் காதிலே கோளாறும் இல்லை. நீ என் தந்தையின் மகள்; ஆகையால் என் சகோதரி! சக்கரவர்த்தி என் அன்னையை மணப்பதற்கு முன்னால் ஈழ நாட்டைச் சேர்ந்த ஒரு தீவிலே ஒரு மாதரசியைக் காதலித்துக் காந்தர்வ மணம் புரிந்து கொண்டார். அவளுடைய புதல்வி நீ; ஆகையால் என் சகோதரி!" என்று கரிகாலர் ஆதுரம் ததும்பிய குரலிலே கூறினார்.



நந்தினி பெருந் திகைப்பு அடைந்தவள் போலச் சிறிது நேரம் ஆதித்த கரிகாலரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவளுடைய முகத்தில் சிறிது தெளிவு தோன்றியது.

"ஐயா! இந்தச் செய்தியைத்தானா தாங்கள் காஞ்சியிலிருந்து புறப்பட்ட பிறகு அறிந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"ஆம், நந்தினி! அதை அறிந்ததும் ஏற்கெனவே விளங்காமலிருந்த பல விஷயங்கள் எனக்கு விளங்கின."

"கோமகனே! தங்களுக்கு இந்தச் செய்தியை வழியிலே சொன்னவர் யார்? வல்லத்து இளவரசரா?"

"அவன்தான்! ஆனால் அவனாகச் சொல்லவில்லை. இளையபிராட்டி குந்தவை அவனிடம் சொல்லி அனுப்பினாள்!"

"ஆகா! தங்களையும் என்னையும் பிரித்து வைப்பதற்கு ஆதிநாளிலிருந்து எத்தனையோ சூழ்ச்சி செய்து வந்திருக்கிறார்கள். இன்னமும் அவர்களுடைய சூழ்ச்சிகள் முடிந்தபாடில்லை......"

"நீ நினைப்பது தவறு, நந்தினி! இதில் சூழ்ச்சி ஒன்றுமில்லை. சிறு பிராயத்தில் உன்னையும் என்னையும் பிரித்து வைப்பதற்குப் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி செய்த முயற்சிகள் எனக்குப் புரியாமலிருந்தன. அதற்காக அளவில்லாத கோபம் அடைந்தேன். அவர் எவ்வளவு பயங்கரமான விபத்திலிருந்து நம்மைத் தடுத்துக் காப்பாற்றினார் என்று இப்போதுதான் தெரிகிறது. ஆனால் உண்மையை அவர்கள் அப்போதே சொல்லியிருக்கலாம். சொல்லாத காரணத்தினால் உனக்குப் பெரும் அநீதி செய்தார்கள்; எனக்கும் தீங்கு செய்து விட்டார்கள். போனது போகட்டும். சென்றதையெல்லாம் நாம் இருவரும் மறந்து விடுவோம்; மறக்க முடியாவிட்டாலும் மன்னித்து விடுவோம்......"

"ஐயா! வல்லத்து இளவரசர் வழியில் தங்களைச் சந்தித்து இந்தக் கதையை மட்டுந்தான் சொன்னாரா? இன்னும் ஏதாவது சொன்னாரா?" என்று நந்தினி கேட்டாள்.

"கதை என்று ஏன் கூறுகிறாய், நந்தினி! உனக்கு நம்பிக்கை இல்லையா?" என்றார் ஆதித்த கரிகாலர்.



"தாங்கள் கூறிய செய்தி அவ்வளவு எளிதாக நம்பக் கூடியதா? சக்கரவர்த்தியின் குமாரியாகப் பிறந்து நான் இந்தக் கதியை அடைந்திருக்க முடியுமா? இவ்வளவு கொடுமையான துன்பங்களுக்கு உள்ளாகி யிருக்க முடியுமா? வந்தியத்தேவன் கூறியது உண்மையாகவே இருக்கட்டும். இது மட்டுந்தான் அவர் சொன்னாரா? வேறு ஒன்றும் சொல்லவில்லையா?" என்றாள் நந்தினி.

கரிகாலர் சிறிது தயங்கிவிட்டு, "ஆம்; இன்னொரு செய்தியும் சொன்னான். நீ பாண்டிய நாட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்திருப்பதாகச் சொன்னான். சோழர் குலத்தையே கருவறுத்துவிடக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதாகச் சொன்னான். அதற்காக, பிடியில் மீன் சின்னம் உள்ள கொலைவாள் ஒன்றை நீ வைத் [redacted]

சொன்னான். அவனை என் காலால் தொட்டு உதைக்கவும் நான் இஷ்டப்பட வில்லை. வேலைக்காரர்களை அழைப்ப தாகச் சொன்ன பிறகு ஓடிவிட்டான். அவனுடைய நீசத்தனமான எண்ணத் துக்கு நான் இணங்காததற்காகத் தங்க ளிடம் இத்தகைய பயங்கரமான கற்பனை களைப் புனைந்து சொல்லி யிருக்கிறான். நான் விரும்பினால் தங்களுடைய தலை யையே கொண்டு வந்து விடுவதாக உறுதி கூறினான். இதை யெல்லாம் தங்க ளிடம் நான் சொல்லிவிடப் போகி றேனோ என்று அவனுக்குப் பயம். அதற் காகவே தாங்கள் கடம்பூர் மாளிகைக்கு வராமல் வழியிலே தடுத்துவிடப் பார்த் தான். அதனாலேயே தங்களுடன் இணை பிரியாமல் சுற்றி வந்து கொண்டிருக் கிறான். அப்படிப்பட்ட நீசன், என் காலினால் தொடுவதற்குக் கூட நான் விரும்பாதவன்,—அவன் என் உடம்பு முழுவதையும் அணைத்துத் தூக்கிக் கரை யேற்றும்படி செய்தீர்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள். இதை நான் மறக்க முடியுமா? அல்லது மன் னிக்கத்தான் முடியுமா?"

இவ்விதம் நந்தினி கண்களில் கோபக் கனல் பொங்கக் கூறிவந்த பயங்கரமான மொழிகளைக் கேட்டுக் கரிகாலருடைய தலை உண்மையிலேயே சுழலத் தொடங் கியது. பளிங்கு மண்டபம், ஏரியின் நீர், காட்டு மரங்கள் எல்லாம் சுழன்றன. சற்று நிதானித்துக் கொண்டு, "சகோ தரி! நந்தினி! நீ சொல்வது உண்மை யாக இருக்க முடியுமா? எதை நம்புவ தென்று எனக்கு மெய்யாகவே தெரிய வில்லை. வந்தியத் தேவன் அவ்வளவு நீசனாக இருக்கக் கூடுமா? அவனுக்கு இந்தப் பேதைப் பெண் மணிமேகலை யைத் திருமணம் செய்விப்பது என்று சற்று நேரத்துக்கு முன்னால்கூட எண் ணினேனே!" என்றார்.

"ஐயா! நான் சொல்வதை மட்டும் நீங்கள் நம்பிவிட வேண்டாம். எப் போதுமே அவசரப் பட்டுத் தாங்கள் காரியம் செய்து விடுவீர்கள். இந்தத் தடவை அப்படிச் செய்ய வேண்டாம். இரண்டு நாள் பொறுத்திருந்து இவனு டைய நடவடிக்கைகளைக் கவனித்து வாருங்கள். தாங்களே தெரிந்து கொள் வீர்கள்!" என்றாள் நந்தினி. (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

## இது நல்ல சண்டை!

சோம்பல் மிகக் கெடுதி பாப்பா — தாய்
சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா! — பாரதியார்

இந்த இதழ் அட்டைப் படத்தில் தோன்றும் அண்ணனையும் தங்கையையும் பாருங்கள். எவ்வளவு சுறுசுறுப்பாக இருக்கிறார்கள்! பாரதியார் கூறிய 'சோம்பல் மிகக் கெடுதி' என்ற உண்மையை அளவுக்கு மிஞ்சி உணர்ந்தவர்கள் போல் தோன்றுகிறதல்லவா! இதற்குக் காரணம் 'தாய் சொன்ன சொல்லைத் தட்டாதே' என்ற வாக்கை இரண்டு பேரும் ஒரே சமயத்தில் நிறைவேற்ற முற்பட்டதுதான்.

தினம் சாயங்காலமானால் அந்தத் தாயார் தோட்டத்திலுள்ள பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றி வருவது வழக்கம். அதைப் போலவே அன்றும் அவள் வந்தாள். குழந்தைகளும் தோட்ட வேலை செய்வதாகக் கூறி அவளுடன் வந்தன. "அப்படியானால் தொட்டியிலிருந்து தண்ணீர் மொண்டு வாருங்கள்" என்று சொல்லிவிட்டுத் தாயார் தன் வேலையைக் கவனித்தாள். தாயார் கூறிய வார்த் தையை நிறைவேற்றுவதில் அந்த அண்ணன் தங்கைக்குள் போட்டி உண்டாகி விட்டது. இருவரும், 'நான் முந்தி நீ முந்தி' என்று சண்டையிட லாயினர்.

இந்தச் சண்டையை அவர்களுடைய தோழன் எவ்வளவு கூர்ந்து கவனிக்கிறான், பாருங்கள்

வாலைக் குழைத்துவரும் நாய்தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா!

என்று பாரதியாரிடம் பாடல் பெற்ற தோழன் அல்லவா! அவனுக்கு அவர்கள் சண்டையைப் பார்ப்பதில்தான் உற்சாகம். சண்டையில் யார் வெற்றி பெற்றாலும் சந்தோஷமே.

ஆனால் அவர்கள் சண்டையைச் சற்றும் பொருட்படுத்தாமல் அந்தத் தாய், செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதிலேயே தன்னை மறந்திருக்கிறாளே! அது ஏன்!

குழந்தைகள் சண்டையில் பெரியவர்கள் தலையிடக் கூடாது என்ற எண்ணமோ! அல்லது......

ஓர் ஆங்கில ஆசிரியர், "தோட்டக்கலையில் ஈடுபடுவது கடவுளுடன் கைகோத்து நடந்து செல்வதற்கு ஒப்பாகும்" என்று கூறியிருக்கிறாரே!......

அதுபோல், அவளும் கடவுள் உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறாளோ!




## தமிழ்ப் பாடலின் அற்புதம்

ஆன்ம தத்துவத்தையும் கடவுள் தத்துவத்தையும் பூரணமாய்க் கண்டு அனுபவித்தவர்கள்தான் நம்மவர்கள்.

ஏதோ நாம் காண்கிற வஸ்துக்கள் நிலைத்துள்ளன என்று முதலில் தோன்றும். ஆராய ஆராய அவைகள் ஒன்றுமே இல்லையென்று தெரிய வரும். மலையோ மரமோ இந்த உலகமேதான் எல்லாம் அணுவாய்ப் போய், அது தேய்ந்து பிறகும், தேய்ந்து, அதன் பிறகும் தேய்ந்து இறுதி இல்லாமல்த்தேய்ந்து போய் ஒரே வஸ்துவாய், எங்குமாய் எல்லாமாய் நிற்கும் என்பது நம்மவர் கண்ட முடிவு. தற்காலத்து ஸயன்ஸ் கண்ட முடிவும் அதுதான்.

"சென்று சென்று அணுவாய்த்
தேய்ந்து தேய்ந்து ஒன்றும்"

என்று மாணிக்க வாசகர் பாடினார்

துக்கு உலகத்தில் எங்குமில்லாத உயர்வையும் ஊர்ஜிதத்தையும் கொடுத்துவிட்டார்கள்.

மூர்த்திக்காக எழுந்த கோயில்கள் எத்தனை! கோடி கோடியாக அல்லவா செலவழித்துக் கட்டியிருக்கிறார்கள். கோயில்களும் கோபுரங்களும் ஒரு அனுபவ உண்மையை அல்லவா எடுத்துச் சொல்லுகின்றன!

* * *

மூர்த்தியைப் பற்றி இவ்வளவெல்லாம் சொல்ல நேர்ந்தாலும் கடவுளை மனசில் இருத்துவதற்கு, அதற்கு மேலான சாதனம் ஒன்று உண்டென்று சொன்னார்கள். — அதாவது தமிழ்ப் பாடல்கள்தான்.

பிள்ளைப்பெருமாள் அய்யங்காருடைய ஒரு அனுபவத்தைப் பார்க்கலாம்.

ஆறன்விளை என்பதாக ஒரு வைஷ்ணவ க்ஷேத்திரம். அங்கு எழுந்தருளியுள்ள பெருமாளைப் பற்றிப் பாடுகிறார்.

அனுஷ்டானங்கள் ஒழுங்காய் வைத்துக் கொள்ளலாம். அதிகாலையில் ஸ்நானம் செய்து பூஜை நைவேத்தியங்களெல்லாம் ஒழுங்காய்த் தினம் தினம் நடத்தலாம். மேலும் ஐந்து புலன்களையும், (பார்த்தல், கேட்டல் முதலிய புலன்களைப்) புறமாகப் போகாமல்த் தடுத்து உள்ளே அந்தர்யாமி

இதோடு ஒட்டி இன்னொரு பாடலையும் பார்க்கலாம். அது புராதனமான பாடல். மதுரை சம்பந்தமானது.

மதுரைக்குப் பக்கத்திலுள்ள ஒரு சிறு ஊரில்க் குடியிருக்கிறவர் ஒருவர். அடிக்கடி மதுரைக்குப் போய்ச் சுவாமி, அம்பாள் தரிசனம் செய்து வருபவர். மிக்க பக்தி கொண்டவர்.

இவ்வளவு பக்தியும் வழி பாடும் இருந்தாலும், ஏதோ குறை ஒன்று இருப்பதாகக் கண்டார் தன்னிடத்தில்.

இறைவன் மனசில் ஏதோ இருக்கிறான்; ஸ்திரமாக இருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும் அதற்கு ஒரு யுக்தி இருக்கிறது என்று கண்டு கொள்ளுகிறார்.

பைங்கண் இளம்பகட்டின்
மேலானை, பால்நிலவுத்
திங்கள் நெடுங்குடையின்
கீழானைக்—கங்குல்பகல்
நாம்வேண்ட நல்நெஞ்சே
நாடுதும்வா, நானிலத்தோர்
தாம்வேண்டும் கூடல்த்
தமிழ்.

[பைங்கண் இளம்பகட்டின் மேலானை: அழகான கண் கொண்ட இளம் ரிஷபத்தின் மேல் வீற்றிருக்கும் பெருமானை; பால் நிலவுத் திங்கள் நெடுங் குடையின் கீழானை: வெண்ணிலவு சந்திரன் பொழிந்த மாதிரி பொழியும் விசாலமான குடையின் கீழ் வீற்றிருப்பவனை; கங்குல் பகல் நாம் வேண்ட: இரவும் பகலுமாய் நாம் தியானித்துக் கொண்டிருக்க; நாடுதும் வா நல்நெஞ்சே: தேடிக் கற்போமாக நல்நெஞ்சே; எதை:— நானிலத்தார் தாம் வேண்டும்: உலகத்தார் எல்லாருமே விரும்பும்; கூடல்த் தமிழ்: மதுரையிலுள்ள அரிய பக்திப் பாடல்களை—நாடுதும் வா.]

தமிழ்ப் பாடல்தான் பாடல். அதன் எளிமையும் இனிமையும் சேர்ந்து எட்டாத வஸ்துவையே நம்மோடு ஒட்டச் செய்து விடுகிறது.

## தனிமையின் இனிமை!



ஜுபிடர் & மேகலா



எம்.ஜி.ராம்சந்தர் நடிக்கும்

# நாம்

மார்ச் 5உ முதல்

சென்னை

ஸ்ரீ கிருஷ்ணா

[redacted]

# மடை அடைத்த பெருமாள்

கி. ரா. கோபாலன்

ஆடுமேய்ந்த நல்லூரிலுள்ள தன் மாமனார் வீட்டுக்கு என் நண்பன் சிவராமன் வந்திருந்தான். ஆடு மேய்ந்த நல்லூர் என்ற அந்தக் கிராமம் எங்கள் ஊருக்குத் தெற்கே மூன்றாவது மைலில் இருப்பதாக அப்பொழுது தான் அவன் எனக்குச் சென்னையிலிருந்து எழுதிய கடிதத்திலிருந்து தெரிந்து கொண்டேன். அவன் தன்னை அங்கு வந்து சந்திக்கும்படியாக என்னை வேண்டிக்கொண்டிருந்தான்.

சிவராமனைப் பார்த்துப் பல வருஷ காலமாகி விட்டதால் அவனைப் பார்க்கும் ஆவலில் அவன் குறிப்பிட்டிருந்த நாளன்று நானும் ஆடு மேய்ந்த நல்லூருக்குப் பாதை கேட்டுக் கொண்டு புறப்பட்டேன். சமீபத்தில் மூன்றாவது மைலிலேயே இருப்பதாக அறிந்ததால் சுலபமாக நடந்தே போய்விடலாம் என்று தீர்மானித்து நடக்கலானேன்.

குறுகிய ...ராதனைப் பெருமை இவைகளைத்

எனக்குக் கோயில் என்றால் ஒரு அலாதி மோகம். நான் எந்த இடத்திற்குச் சென்றாலும் அங்கு ஒரு கோயிலைக் கண்டு விட்டால் உடனேயே அதற்குள் நுழைந்து சுற்றிப் பார்க்காமல் விடுவதில்லை. கோயிலைப் பார்ப்பதோடு மட்டும் என் மனசு திருப்தியடைந்து விடாது. அந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுவாமியின் மகிமை, அந்த ஸ்தலத்திற்குள்ள புராதனப் பெருமை இவைகளைத் தீரத் தெளிய அறிந்து கொண்டால்தான் எனக்குத் தூக்கம் வரும். எந்தக் கோயிலுக்காகிலும் புராதனமான வரலாறு எதுவும் தேடியும் கிடைக்கா விட்டால், நானே துணிந்து அதற்குப் பெருமை கொடுக்கக் கூடிய வகையில் க்ஷேத்திர வரலாறு தயார் செய்து விடுவது வழக்கம்.

மெதுவாக அந்தச் சிறு வாய்க்காலைத் தாண்டி அந்தக் கோயில் வாசற்படிக்கு வந்

வாசற்படி தாண்டிக் கோயிலுக்குள் வந்தேன். அந்தப் பையன் சொல்லியபடி கோயில் பிரகாரம் முழுவதும் புல்லும் புதரும் தான் இருந்தன. முள்ளும் கல்லும் காலில் குத்தின. கோயில் உட்புற மெல்லாம் அங்கும் இங்கும் இடிந்து பாழாகி இருந்தன. முட்புதர் மண்டிக் கிடக்கும் அந்தப் பிரகாரத்தைச் சுற்றி வருவது கடின மென்று உணர்ந்து கொண்டேன். கோயிலின் சன்னிதானத்துக்குச் சென்று பார்க்க கினைத்தேன். அதன் முன்புற மண்டப மெல்லாம் இடிந்து விழுந்திருந்ததினால் உள்ளே போவதற்கு வசதி இல்லாமல் இருந்தது. எங்கும் இருளும் வௌவால்களின் சஞ்சாரமும் தான் இருந்தனவே தவிர விசேஷமாக எதுவுமிருப்பதாகவே தெரியவில்லை. எங்காவது தட்டுத் தவறியாவது ஒரு கற்சிலையாகிலும் கண்ணில் படாதா என்று ஆவலுடன் துருவித் துருவிப் பார்த்த எனக்கு ஏமாற்றம்தான் ஏற்பட்டது!

ஊரை நோக்கிச் சிறிது தூரம் நடந்தேன்

மண்ணை அப்பி மடையடைக்காமல் அந்தச் சிலையையே கொண்டு வந்து மடையடைத்திருக்க வேண்டுமென்று தான் தோன்றியது. அந்தச் சிலை சுமார் ஐந்தடி உயர மிருக்கும். சங்கு சக்கர கதாபாணியாய், அபயக் கரங் காட்டி, கம்பீரமாக நிற்கும் அந்தச் சிலையைக் கண்டவர் யாரும் அதை ஸ்ரீ மகா விஷ்ணுவின் சிலாரூபம் என்று எளிதாக உணர்ந்து கொள்வார்கள். அழகான சிலை. அந்தச் சிலையில் எவ்வித பின்னமும் ஏற்பட்டிருப்பதாகவும் தெரியவில்லை. சமீபத்திலிருந்த கோயிலைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்த எனக்கு அந்தச் சிலை எங்கிருந்து வந்திருக்க வேண்டும் என்று எளிதாக உணர்ந்து கொள்ள முடிந்தது. ஐயோ பாவம்! மடையை அடைப்பதற்குப் பெருமாளின் சிலைதானா அகப்பட்டது! அந்தச் சிலையைப் பார்த்ததிலிருந்து அந்தப் பாழடைந்த கோயில் ஒரு பெருமாள் கோயில் தான் என்று தீர்மானம் செய்து

அந்தப் பேச்சிலெல்லாம் சுவாரஸ்யம் ஏற்படவில்லை. எனக்கு அந்தப் பாழடைந்த கோயிலைப் பற்றிய நினைவாகவே இருந்தது. அந்த ஊரில் வயதில் பெரியவர்களாய் உள்ளவர்களைச் சந்தித்துத் தீரத் தெளிய விசாரிக்க வேண்டுமென்பது என் அவா. ஆனால் இவை யெல்லாம் என் நண்பன் சிவராமனுக்குப் பிடிக்காது. ஆனால் அவனுக்குத் தெரியாமல் காரியத்தை எப்படிச் செய்வது என்றுதான் எனக்குத் தோன்றவில்லை.

சிவராமனின் மாமனார் அந்த ஊரில் சிறிது வியாபகம் உள்ளவராகத் தென்பட்டார். வயதானவர்; பேச்சிலும் நிறைந்த அனுபவ அறிவு படைத்தவர்போல் தென்பட்டார். அவருடைய பேச்சு சில சமயம் அளவு கடந்ததாய் இருந்தாலும் அது எனக்குப் பிடித்திருந்தது. அந்த மனிதர் பேச ஆரம்பித்தால் போதும். கேட்பதற்கு என்னைப் போல் ஒரு மனிதன் இருந்து விட்டால் நாள் கணக்காகச் சளைக்காமல் பேசுவார் போலிருந்தது. இந்த மனிதரிடம் அந்தப் பாழும் கோயிலைப் பற்றிச் சரியான கதையைத் தெரிந்து கொண்டு விடலாம் என்று தீர்மானம் செய்து கொண்டேன். அதற்குரிய சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி இருந்தேன்.

சிவராமன் அன்று இரவு என்னை அங்கு தங்கிவிட்டுப் போகும்படி வேண்டிக் கொண்டான். அவனுக்கு என்னோடு எவ்வளவோ பேச வேண்டுமென்று ஆசை. பகல் முழுதும் அவனுடைய மாமனாரின் பேச்சிலேயே பொழுது ஓடிவிட்டதால் இரவு நேரத்திலாவது என்னோடு நிம்மதியாக ஏதாவது பேசலாம் என்பது அவன் ஆசை. அவன் இரவு அங்கு தங்கிப் போகும்படி என்னை வேண்டிக் கொண்டதில் எனக்கொரு ஆறுதல். இரவில் சாவகாசமாக இடிந்த கோயிலின் மகிமையைப் பற்றி அவனுடைய மாமனாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமல்லவா?

இரவு சாப்பாட்டிற்குப் பின் வாசல் திண்ணையில் படுக்கையைக் கொண்டு வந்து போட்டு விட்டு என்னோடு பழங் கதைகள் பேச ஆரம்பித்தான் சிவராமன். அவனுடைய மாமனார் நடுத் தெருவில் நின்று காற்று வாங்கிக் கொண்டிருந்தார். "என்ன அண்ணா! ஏன் அங்கே நிற்கிறீர்கள்? வாங்கோ, கொஞ்சம் பேசுவோம்" என்று அவனுடைய மாமனாரைக் கூப்பிட்டேன். இது சிவராமனுக்கு மிகுந்த ஆத்திரத்தைக் கொடுத்தது. "ஏண்டா அவரைக் கூப்பிடுகிறாய்? அவர் பேச ஆரம்பித்தால் நம்மைத் தூங்க விடுவாரா?" என்றான் மெதுவான குரலில்.

அதற்குள் அவனுடைய மாமனார் திண்ணையில் வந்து உட்கார்ந்து, "உங்கள் தூக்கத்துக்கு இடைஞ்சலாக இருக்குமோ என்று நினைச்சேன்" என்றார்.

"அதெல்லாம் இல்லை, அண்ணா! உங்களோடு பேசிச் சில விஷயங்களைத் தெரிஞ்சு கொள்ளணும்னுதான் எ...

அவர் ஒரு தடவை பொடியை உறிஞ்சி விட்டு "என்ன?" என்றார்.

"இந்த ஊருக்கு வரும் வழியிலே, வாய்க்காலுக்குக் கீழ்ப் புறத்தில் ஒரு இடிந்த கோயில் இருக்கிறதே......"

"ஆமாம் பெருமாள் கோயில்......"

"அது பெருமாள் கோயில்தானே? அப்பாடா! ஒரு சந்தேகம் தீர்ந்தது. அதிருக்கட்டும், கீழ்ப்புறம் வாய்க்காலுக்கும் வயலுக்குமிடையே வரப்பை ஒட்டினாற்போல் மடையடைத்தாற் போல ஒரு பெருமாள்சிலையை வைச்சிருக்கே......" என்று நான் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ...... "அடடே! அது உங்க கண்ணுலே பட்டுதே அதுதான் ஆச்சர்யம்! அதோடு மட்டுமல்ல. அந்தப் பாழடைந்த கோயிலுக்கும் அந்தப் பெருமானுக்கும் ஏதோ சம்பந்தமிருக்க வேணும்னு உங்களுக்குத் தோணித்துப் பாருங்கோ, அதுதான் புத்திசாலித்தனம். உலகத்திலே எத்தனையோ மனுஷ்யாள் இருக்கா. எல்லார் மனசிலேயும் படுமா?" என்றார் அவர்.

"இந்த மாதிரி பயித்திய மெல்லாம் எனக்குக் கொஞ்சம் உண்டு. மத்யானத்திலிருந்து அதைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ளணும்னு துடிப்பு" என்றேன்.

"ஐயோ பாவம்! இதை மத்யானமே கேட்டிருந்தால் சொல்லியிருப்பேனே. அது ஒரு கதை......"

"அது ஒரு கதையாய் இருக்கும் என்றுதான் ராத்திரி வேளையில் கேட்க நினைத்தேன்."

"அந்தப் பெருமானுக்கு 'மடை அடைத்த பெருமாள்' என்று பெயர்."

"பொருத்தமான பெயர்தான்......"

"பெயர் இருக்கட்டும். அந்தப் பெயர் எப்படி வந்தது என்பதில்தான் சுவாரஸ்யமிருக்கு......"

"அதற்கு ஒரு காரணமோ கதையோ இல்லாமலா இருக்கும்" என்று சொல்லிவிட்டு அவரிடம் கதை கேட்க தயாரானேன்.

*

"முன்னொரு காலத்திலே இந்த ஊரிலே 'திருநாம தாஸர்'ன்னு ஒரு வைஷ்ணவ பக்தர் இருந்தாராம். அந்த மனிதர் மிகவும் ஏழை. இந்த ஊரிலே ஒரு பெருமாள் கோயில் இல்லாதது பெரிய குறையாய் இருந்தது அவருக்கு......

"ஆனால், திருநாம தாஸர் ஏழையிலும் ஏழை. கோயில் கட்ட அவரிடம் பொருள் ஏது? ஊர் ஊராகப் போய் யாசகம் வாங்கிக் கொண்டு வந்து கோயிலைக் கட்டி விட்டார், எப்படியோ! கோயிலை எப்படியடா கட்டி முடிக்கப் போகிறோம் என்று மிகவும் சிரமப்பட்டு, தளர்ச்சியடைந்த அவரை மேலும் சிரமத்துக்கு உள்ளாக்க விரும்பாமல் பெருமாள் அவரை வைகுண்டத்துக்கு அழைத்துக்

"பாவமாவது. புண்ணியம் என்று சொல்லுங்கள். கோயிலைக் கட்டின அந்த மனிதர் இருந்தால் தினசரி பெருமாளுக்குப் பூஜை நடத்துவதற்குப் பொருள் சேர்க்க வேண்டிய சிரமம் ஏற்பட்டிருக்கும் அவருக்கு.

"பாவம்! அந்த ஏழை மனிதர் கோயில் கட்டுவதற்கு எடுத்துக் கொண்ட சிரமம் போதாதா?

"கோயில் அந்தப் புண்ணியவான் கட்டி வைத்து விட்டுப் போய் விட்டார். பூஜை யார் செய்வது? ஒருவரும் மான்யம் வைக்கவில்லை. பெருமான் கோயிலில் தினசரி ஒரு வேளைகூட விளக்கேற்றிப் பூஜை செய்ய வழி இல்லாதபோது ஊரிலுள்ளவர்கள் பெருமாளுக்கு உத்ஸவம் செய்யும் விஷயமாகத் தர்க்கம் செய்யலானார்கள். ஊர் இரண்டு கட்சியாயிற்று. ஒரு சாரார் சித்திரை மாதம் உத்ஸவம் செய்ய வேண்டுமென்றார்கள். மற்றொரு சாரார் மாசிமாதம் செய்வதுதான் உத்தமம் என்றார்கள். இப்படியே உத்ஸவம் நடத்துவது பற்றியே சச்சரவிட்டு வருஷத்தைக் கடத்தி வந்தார்களே தவிர, கோயிலைப் பாதுகாத்து ஸ்வாமிக்குப் பூஜை, நைவேத்தியம் செய்வதைப் பற்றியே ஒருவரும் கவலைப் படவில்லை......"

"இப்படியே காலடைவில் கோயில் இடிந்து பாழாய்விட்டது போலிருக்கிறது..."

"ஆமாம். இடையிலே ஒரு விசேஷம் நடந்ததுதான் முக்கியம். அதுதான் பெருமானே வந்து மடை அடைத்து நின்ற கதை..."


# கல்கி

(வாரப் பதிப்பு)

## சந்தா விவரம்

| | ஒரு வருடம் | ஆறு மாதம் |
| --- | --- | --- |
| இந்தியா, சிலோன் | ரூ. 13-0-0 | 6-8-0 |
| பர்மா, மலேயா, வெளிநாடு | ரூ. 14-10-0 | 7-5-0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவு செய்து முன் பணம் அனுப்ப வேண்டும். சிலோன் நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையைச் செலுத்தலாம்.

கடிதம் எழுதும்போது சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை


"அதற்கும் காரணம் இருக்கிறது. அந்தக் காலத்தில் பெரியதம்பி, சின்னண்ணன் என்று இரண்டு குடியானவர்கள் இந்த ஊரிலே இருந்தார்கள். அவர்கள் இருவரும் பங்காளிகள்—பரம விரோதிகள். எப்பொழுதும் அவர்களுக்குள் ஏதாவது தகராறுகள் இருந்து

தொடங்கினர். இதற்குப் பயப்படுமா அந்தப் பேய். அவர்களுக்குத் தெரியாமல் வந்து வரப்பின் கரையை உடைத்துவிட்டு வாய்க்காலில் பிரவாகமாக வரும் நீரை வயலில் பாயும்படியாகச் செய்தது. வயலில் நீர் பாய்வதை அறிந்த முனியனும் அவனுடைய மனைவியும் அந்த மடையை அடைக்கப் பெரு முயற்சி செய்தனர். பக்கத்தில் இருந்த மண்ணை எல்லாம் சேர்த்து அடைத்து வயலில் தண்ணீர் புகாவண்ணம் செய்யப் பிரயத்தனப் பட்டனர். ஆனால் அவர்களுடைய முயற்சி யெல்லாம் வீணாயிற்று. அந்தப் பேய் அவர்கள் கண்களுக்குப் படாமலேயே மறைவாக இருந்து, அவர்கள் சேர்ந்து அடைக்கும் மண்ணை எல்லாம் தண்ணீரில் உடைத்து விட்டுக் கொண்டிருந்தது. முனியனும் அவன் மனைவியும் ஆயாசமும் வெறுப்பும் அடைந்தார்கள். அந்தச் சமயத்தில் முனியனின் கண்களில் பக்கத்திலிருந்த இடிந்து பாழடைந்து போன பெருமான் கோயில் தென்படவே அவன் ஆயாசத்தோடு 'ஏ பெருமானே! உனக்குக் கண்ணில்லையா? இந்தப் பேய் இப்படி அட்டூழியம் செய்யுதே, இதை யார் பொறுப்பார்கள்?' என்றான் மனம் நொந்து.

"அந்தச் சமயத்தில் 'பக்தா!' என்ற குரல் கேட்டதாம். உடனே நான்கு புறமும்

...னுக்கு உபதேசித்ததுபோல் உபதேசிக்கச் சந்தர்ப்பமில்லை. மழை, காற்று, வெய்யில் எல்லாம் என்னால் உண்டாக்கப் படுபவை. அவைகள் என்னை ஒன்றும் செய்துவிடாது. பயப்படாதே! நான் சொல்வதைச் செய்வது தான் உன் கடமை. போ! கோயிலில் உள்ள என்னுடைய சிலாரூபத்தை எடுத்துக் கொண்டு வந்து இந்த மடையை அடை! தாமதம் செய்யாதே!'' என்றது.

இதற்கு மேல் முனியன் தாமதிக்கவில்லை. தன் மனைவியை வயலுக்கும் அதிக ஜலம் போகாமல் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுக் கோயிலை நோக்கி ஓடினான். கோயிலில் மூலஸ்தானத்தில் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் பெருமானை அசைத்துக் கிளப்பித் தூக்கினான். அந்தச் சமயம் பெருமான் அவனுக்குக் கனமானவராகத் தோன்றவில்லை. சில நிமிஷ நேரத்திற்குள் அந்தச் சிலையைக் கொண்டு வந்து தன் வயலில் திறந்து விடப்பட்டிருந்த மடையை அடைத்தான். வயலில் பெருகிய ஜலம் நின்றது. உடனே ஆடினான் - பாடினான் - குதித்தான் - பக்திப் பரவசத்தில் ஆழ்ந்தான். பெருமான் முனியனின் வயலில் வந்து நின்று மடையை அடைத்து நின்றதைக் கண்ட பெரிய...

உலகத்தின் உச்சி உணர்ச்சிக்கு

**போனிக்ஸ்**

விசிறிகளை உபயோகியுங்கள்



# PHOENIX

FANS

EPOCH




ஆபிஸிலோ அல்லது வீட்டிலோ இருந்தவண்ணமாகவே, குளிர்ந்த கடற்காற்றையோ, மந்தமாருதத்தையோ அனுபவிக்க, போனிக்ஸ் விசிறிகளைப் பொருத்தினாலேயே போதுமானது!

RMS-2

**R.M.S. & CO. LTD., 16, Broadway, Madras. 1.**

டேபிள், சீலிங், பெடஸ்டல், எக்ஸாஸ்ட் ரக விசிறிகளும் கிடைக்கின்றன

---




தென்னிந்தியாவின் தலைசிறந்த

# டி.எஸ்.ஆர்

தயாரிப்புகள்

| | |
|---|---|
| **3½ %**<br>**வரியில்லாத**<br>**வட்டி**<br>**வருஷாவருஷம்**<br>**உங்களுக்குக்**<br>**கிடைக்கும்** | **10 வருஷ**<br>**டிரெஷரி**<br>**சேமிப்பு**<br>**டிபாஸிட்டுகள்** |

## பத்திரங்கள்
## 100 ரூபாய் பெருக்கத்தில் வழங்கப்படும்

| முதலீட்டு எல்லை | எங்கே வழங்கப்படுகின்றன |
|---|---|
| ரூ.<br>தனி நபர் 25,000<br>இருவர் சேர்ந்து 50,000<br>ஸ்தாபனங்கள் 50,000<br>தர்ம ஸ்தாபனங்கள் 1,00,000<br><br>மைனர் குழந்தையின் பேரில் தகப்பனாரோ, தாயாரோ டிபா | (i) கல்கத்தா, பம்பாய், மதராஸ், டெல்லியில் உள்ள இந்திய ரிசர்வ் பாங்கி ஆபீஸ்களிலும் மற்ற இடங்களில் சர்க்கார் டிரெஷரி அலுவல்களைக் கவனிக்கும் இந்திய இம்பீரியல் பாங்கி கிளை ஆபீஸ்களிலும்.<br>(ii) டிரெஷரி அலுவல்களைக் கவனிக்காத இந்திய இம்பீரியல் பாங்கி உள்ள "A" பாகத்திய ராஜ்யங்களில் உள்ள எல்லா ஜில்லா டிரெஷரிகளிலும்.<br>(iii) "A" பாகத்திய ராஜ்யங்களில் உள்ள எல்லா சப்-டிரெஷ |

# விந்தை எலுமிச்சை

பகீரதன்

"என் தகப்பனாருக்கு இன்று நூறாவது பிறந்த நாள். நீங்கள் அவசியம் வரவேணும்" என்று கூப்பிட்டார் போலீஸ் இலாகாவில் நாற்பது வருஷம் வேலை பார்த்துவிட்டு ஓய்வு பெற்றிருக்கும் எனது நண்பர்.

"அதற்கென்ன வருகிறேன்" என்றேன்.

மாலையில் என் நண்பர் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் என்னை அகமும் முகமும் மலர வரவேற்று "இவர்தான் என் அண்ணா" என்று தம்மைவிடச் சற்று இளமையாகத் தோன்றும் ஒரு மனிதரை எனக்கு அறிமுகப்படுத்தி விட்டு மற்ற விருந்தினர்களை வரவேற்கச் சென்று விட்டார்.

நான் என் நண்பரின் அண்ணாவுடன் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு, "உங்கள் தகப்பனார் எங்கே இருக்கிறார்? அவரைப் பார்த்து விட்டு வருவோமா?" என்றேன்.

அந்த மனிதர் தம் முத்துப் போன்ற பற்களைக் காட்டிக் கொண்டு கலகலவென்று சிரித்தார். "எனக்குத்தான் இன்று நூறாவது பிறந்த நாள். எங்கள் குடும்பத்தினர் எல்லாரும் தங்கள் தந்தையை 'அண்ணா' என்று தான் அழைப்பார்கள்" என்றார்.

எனக்கு ஒருகணம் ஒன்றுமே புரியவில்லை. வாய் நிறையப் பல் இருக்கிறது. தலைநிறைய மயிர் இருக்கிறது. ஆள் சுறு சுறுப்பாக இருக்கிறார். இவருக்கு நூறு வயது ஆகியிருக்குமா என்று எண்ணி வியந்தேன்.

என் வியப்பை உணர்ந்த அந்தப் பெரியவர் "என்னைப் பார்த்தால் நூறு வயது ஆகியிருக்காது என்று நினைக்கிறீர்கள் அல்லவா? அந்த ரகசியத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள்" என்று ஆரம்பித்தார்.

"கவியரசர் பாரதியார் 'கட்டுமாறு உடலுறுதி வேண்டும்' என்று பாடியிருக்கிறார் அல்லவா? உடலில் கட்டுமாறு வலிமையும் உறுதியும் வேண்டுமானால் உணவு விஷயத்தில் கட்டுப்பாடுகள் வேண்டும். நான் புளியையே சேர்த்துக் கொள்வதில்லை. அதற்குப் பதில் எலுமிச்சைச் சாற்றைத்தான் உபயோகப்படுத்தி வருகிறேன். அத்துடன் வாரம் இரண்டு முறை எலுமிச்சம் பழ ரஸத்தையே தேய்த்து ஸ்நானம் செய்து வருகிறேன். தினம் தவறாமல் காலையிலும் மாலையிலும் தோட்டவேலையில் ஈடுபட்டு வருகிறேன். அதனால்தான் நூறு வயது ஆகியும் சுகமாக இருக்கிறேன். ஆனால் இப்பொழுதெல்லாம் எலுமிச்சம் பழம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அப்படியே கிடைத்தாலும் அதில் போதுமான அளவு ரஸம் இருப்பதில்லை" என்று குறைப்பட்டார்.

"அடாடா! எலுமிச்சம் பழத்துக்கு இவ்வளவு சக்தி இருக்கிறதா? வாழ்க, எலுமிச்சை!" என்று எலுமிச்சைக்கு வாழ்த்துக் கூறி அவரிடம் விடைபெற்றுக் கொண்டேன். அந்த நினைவு எனக்கு இன்னமும் பசுமையாகவே இருக்கிறது.

எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு இச்சம்பவத்தைப் பற்றி விவசாயத் துறையில் விசேஷ ஊக்கம் காட்டிப் பாடுபட்டு வரும் என் தோழர் ஒருவரிடம் கூறினேன். அவர் பெயர் ஜனாப் ஹமீது 'தாஜ் நர்ஸரி' என்ற செடிப் பண்ணை வைத்து நடத்தி வருகிறார்.

"அந்த நூறு வயது மனிதர் இப்போது இருக்கிறாரா?" என்று கேட்டார்.

"அநேகமாக இருக்க மாட்டார் என்று நினைக்கிறேன். அவரைப் பற்றி ஏன் இவ்வளவு அக்கறையாக விசாரிக்கிறீர்கள்?"

"இனிமேல் அவர் எலுமிச்சம் பழத்துக்கும், அதிலும் நிறைய ரஸம் உள்ள எலுமிச்சம் பழத்துக்குக் கஷ்டப்பட வேண்டாம். ஒரே எலுமிச்சம் பழத்தில் ஒரு டம்ளர் ரஸம் எடுக்கலாம். அந்த மாதிரி எலுமிச்சம் பழம் இருக்கிறது. வாருங்கள், காண்பிக்கிறேன்" என்று என்னை ஒரு பெரிய மனிதர் வீட்டுத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றார்.

சென்னை நகரில் கதீட்ரல் ரோடில் இருக்கும் இந்தத் தோட்டத்தின் சொந்தக்காரர் ஜனாப் எம். ஏ. ஹபீஸ். இவர் காட்டிலாகாவில் ஒரு உயர்தர அதிகாரியாக இருந்து சமீபத்தில்தான் ஓய்வு பெற்றிருக்கிறார் என்றும் அவர் எலுமிச்ச மரங்களை வளர்ப்பதில் பல அபூர்வ சாதனைகளைச் செய்திருக்கிறார் என்றும் அறிந்து கொண்டேன்.

அந்தத் தோட்டத்தில் உள்ள எலுமிச்ச மரங்களைப் பார்த்தபோது எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. ஏதாவது மந்திர தந்திரங்கள் மூலம் மாய வித்தைகள் செய்து நம்மை ஏமாற்றுகிறாரோ என்று எண்ணிப் பிரமிக்கும்படி இருந்தது. உரித்த தேங்காய்கள் குலை குலையாகக் காய்த்துத் தொங்குவது போல எலுமிச்சம் பழங்கள் அந்த மரங்களில் காய்த்துக் குலுங்கிக் கொண்டிருந்தன. எலுமிச்ச மரமும் அப்படி ஒன்றும் பெரிதாக இல்லை. சாதாரணச் செடி போலத்தான் இருந்தது. சிறு குழந்தைகள் கூட எலுமிச்சம் பழங்களை எட்டிப் பறித்து விடலாம். அவற்றில் சில பழங்கள் பூமியைக் கூடத் தொட்டுக் கொண்டிருந்தன. சில எலுமிச்சம் பழக் குலைகள் கனம் தாங்காது அதன் கிளைகள் முறிந்துவிடுமோ என்று அந்தக் கிளைகளுக்குத் துணைக்கால் நட்டு முட்டுக் கொடுத்திருந்தனர். மஞ்சள் நிறத்துடன் தங்க உருண்டைகள் போலப் பசுமையான இலைகளுக்கு மத்தியில் குலை குலையாகத் தொங்கிய எலுமிச்சம் பழங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதைவிட வேறு இனிமையான காட்சி ஒன்றும் இருக்க முடியாது.

"இவ்வளவு பெரிய எலுமிச்சம் பழங்கள் குலை குலையாகக் காய்த்துக் குலுங்கும் அற்புதத்தை நான் பார்த்ததே இல்லை. இந்த விந்தையை எப்படிச் சாதித்தீர்கள்?" என்று அந்தத் தோட்டத்தின் அதிபரைக்கேட்டேன்.

"இயற்கை எப்போதும் புதிய புதிய காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறது. யாரும் அதில் கவனம் செலுத்தாததுதான் காரணம். சற்று முயன்று பாடுபட்டால் நம் வீட்டுத் தோட்டத்திலும், வயல் வெளியிலும், பண்ணைகளிலும் இதைப் போன்ற எத்தனையோ அற்புதங்களைச் செய்யலாம். பூமியைப் பண்படுத்தி நமக்கு வேண்டிய எல்லாக் கனி வர்க்கங்களையும் நாமே உண்டாக்கிக் கொள்ளலாம்" என்ற பீடிகையுடன் ஆரம்பித்து எலுமிச்சை விவசாயத்தைப் பற்றிய பின்வரும் விவரங்களைக் கூறினார் :—

"நிலத்தை முதலில் நன்றாகக் கொத்தி வாங்கி விடவேண்டும். பிறகு மூன்று அடி அகலம், மூன்று அடி

அவைகள் காற்றில் ஆடாமல் இருப்பதற்குச் செடிக்குப் பக்க பலமாக ஒரு குச்சியை நட்டுச் செடியைக் கட்டி விட்டுச் செடியின் மீது வெய்யில் பட்டும் படாமலும் இருக்கும் படியாகப் பந்தல் போட வேண்டும். செடி நன்றாக வேர் பிடித்துப் பசுமை கொண்டு தழைத்து வளர ஆரம்பித்தவுடன் பந்தலைப் பிரித்து விடலாம்" என்றார்.

அவரை மேலும் பலப் பல கேள்விகள் கேட்டதில், எலுமிச்சம் பழம் நல்ல மகசூல் தருவது, முக்கியமாக நல்ல ஜாதி எலுமிச்சம் கன்றுகளாகப் பார்த்து வைப்பதில்தான் இருக்கிறது. எலுமிச்சையில் எத்தனையோ வகைகள் இருக்கின்றன. மால்டா, சிசிலி, செவிலிபிராங்கா, இத்தாலி, சதாபல் என்று இன்னும் பல வகைகள் இருக்கின்றன. நம் நாட்டு எலுமிச்சை வேறு இருக்கிறது. நாட்டு எலுமிச்சம் பழத்துக்கும் நான் மேலே

ஈன்ன எலுமிச்சை உண்டாகிவிடும். ஆனால் நீங்கள் இப்படி எல்லாம் இப்போது கஷ்டப் படவேண்டியதில்லை. இதில் முற்றிய பழங் களின் நல்ல விதைகளை விதைத்து நாற்றுக் கிளம்பியவுடன், நல்ல நாற்றுக்களாகப் பொறுக்கி எடுத்துத் தனித்தனி இடங்களில் வைத்து வளர்த்து சுமார் ஒரு அடி அல்லது ஒன்றரை அடி வளர்ந்தவுடன் நான் முன்னே கூறியது போல நட்டு வளர்க்க வேண்டும்.

"செடி நன்ருக வளர்ந்தவுடன் செடி தழைத்துப் படர்ந்திருக்கும் அகலத்துக்குப் பூமியை ஒன்றும் செய்யாமல் அதற்கு வெளியில் மண்ணைக் கிளறி எருவும் தண்ணீ ரும் விடவேண்டும். செடியின் அடிமரத்தி லிருந்து செடி தழைந்து படர்ந்திருக்கும் இடம் வரையில் தண்ணீர் தேங்காமல் இருக் கும்படி சரிவாகத் தண்ணீர் ஓடும் வாட்டத் துக்குப் பூமியை மேடுபடுத்தி வைக்க வேண் டும். அப்பொழுதுதான் செடி நன்ருக வளர்ந்து நிறையப் பழங்கள் காய்த்து வேண்டிய பலன் கொடுக்கும்" என்ருர்.

"எலுமிச்சம் செடிகளுக்கு வியாதிகள், பூச்சி தொந்தரவுகள் ஒன்றும் ஏற்படாதோ?" என்று கேட்டேன்.

"உண்டாகும். அதைப் போக்குவது ஒன் றும் சிரமம் இல்லை. 'போர்டோ மிக்ஸர்' என்ற மருந்தைச் செடிகள் மீது தெளித்தால் போதுமானது. அதாவது ஐந்து பவுண்டு மயில் துத்தம், ஐந்து பவுண்டு சுண்ணும்பு இரண்டையும் ஐம்பது காலன் தண்ணீரில் கலந்து கொள்ள வேண்டும். அந்தக் கலப்புக் குத்தான் 'போர்டோ மிக்ஸர்' என்று சொல் லுவது" என்று கூறிவிட்டு வருஷத்துக்கு இரண்டு முறை செடிகளுக்கு எருப்போடும் முறையையும் விளக்கினர்.

"இருநூறு பவுண்டு மக்கிய மாட்டுச் சாண எரு, ஏழு பவுண்டு கடலைப் பிண்ணுக்கு, ஏழரைப் பவுண்டு அமோனியம் சல்பேட் இந்த மூன்றையும் கலந்து வைத்துக்கொண்டு இந்த அளவில் பாதியை ஆறுமாதத்துக்கு ஒரு முறை செடிகளுக்குப் போட்டு வந்தால் எலுமிச்சை நன்ருக வளர்ந்து வேண்டிய பழங்கள் கொடுக்கும். குழந்தையைப் பேணி வளர்ப்பது போலச் செடிகளைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்ற வேண்டும். ஒரு குடும்பம் பிழைப்பதற்கு ஒரு ஏக்கர் நிலத் தில் நல்ல ஜாதி எலுமிச்சையைச் சாகுபடி செய்தால் போதுமானது" என்ருர்.

இப்படி பிரமிக்கத்தக்க முறையில் ஒவ் வொரு ஜாதி எலுமிச்சையையும் ஜனுப் எம். ஏ. ஹபீஸ் வளர்த்திருக்கிருர். அவர் சர்க்கார் காட்டிலாகாவில் உயர்தர அதிகாரி யாக வேலை பார்த்து வந்தவராதலால் சர்க் கார் விவசாய இலாகாவைப் பற்றிய சில அபிப்பிராயங்களைச் சொன்னர். விவசாய இலாகாவில் இருப்பவர்கள் பொது ஜனங் களுடன் இன்னும் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். பரம் பரை பரம்பரையாக விவசாயத்தில் ஈடுபட்டு



ஆரஞ்சுப் பழம்போல் பெரிதான 'சதாபல்' எலுமிச்சை

உழைத்து வரும் விவசாயிகளுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைக்காமல் அவர்க ளுடைய அனுபவ ஞானத்தையும் தங்க ளுடைய படிப்பு ஞானத்தையும் சேர்த்துப் பயன்படுத்த முயல வேண்டும் என்ருர்.

இந்தச் சமயத்தில் அவருடைய சமையல் காரர் மூன்று கிளாஸ் சர்பத் கொண்டு வந்து கொடுத்தார். "இந்த மூன்று கிளாஸ் சர்பத்தும் பாதி எலுமிச்சம் பழத்திலேயே தயார் செய்தது. உடம்புக்கு மிகவும் நல்லது. வெய்யில் காலத்துக்கு ஏற்றது. சாப் பிடுங்கள்" என்ருர் ஜனுப் ஹபீஸ். அடாடா! அதன் சுவையை எப்படி எழுதிக் காட்டு வது? "இப்படி தினம் ஒரு கிளாஸ் எலுமிச்சம்பழ சர்பத் சாப்பிடுவதற்காவது வீட்டுத் தோட்டங்களில் எலுமிச்சை பயி ரிட்டு வளர்த்து வரலாம்" என்றேன்.

"சர்பத் மட்டும்தாஞ செய்யலாம்? ஊறு காய் போடலாம். எலுமிச்சம் சாதம் செய்ய லாம். நோய் இல்லாமல் வாழலாம்" என்ருர்.

"போய் வருகிறேன்" என்று அவரிடம் விடைபெற முயன்றேன்.

"சற்று இருங்கள்" என்ருர்.

பிறகு அவர் ஒரு தட்டில் இரண்டு பெரிய எலுமிச்சம் பழங்களை வைத்து எடுத்துக் கொண்டு வந்தார். "பழைய காலத்தில் மகா ராஜாக்களைப் பார்ப்பதற்கு எலுமிச்சம் பழங்களைக் கொண்டு போவார்களாம். இப் போதுதான் எல்லாரும் இக் நாட்டு மன்னர்க ளாயிற்றே!" என்ருர் சிரித்துக் கொண்டே.

தங்கமுலாம் பூசியது போலப் பள பளத் துக் கொண்டிருந்த இரண்டு பெரிய எலுமிச் சம் பழங்களையும் பெற்றுக் கொண்டு ராஜ நடை போட்டு வீட்டுக்கு வந்தேன்.



# அதிர்ஷ்டக் குழந்தை

**விஜயம்**

## 7. ராஜாவும் ராணியும்!

ராஜா இந்தக் கேள்வியைக் கேட்டதும் கௌசல்யாவின் தாயாரின் விசாலமான கண்களிலிருந்து மளமள வென்று கண்ணீர் பெருகியது.

அம்மா கண்ணீர் விடுவதைப் பார்த்ததும் கௌசல்யாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ராஜாவின் முகத்தையும் அம்மாவின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள். பாவம், ராஜாவும் ஒன்றும் புரியாமல் தவித்தான். தான் அந்த மாதிரி கேட்டிருக்கக் கூடாது என்று நினைத்து அவன் மிகவும் வேதனைப் பட்டான்.

கண்களில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள், கௌசல்யாவின் தாயார். ராஜாவையும் கௌசல்யாவையும் தன் அருகில் அழைத்து அவர்கள் தோள்களின் மீது கையை வைத்து அணைத்துக் கொண்டாள்.

"குழந்தை, ராஜா! நான் இதுவரையில் யாரிடமும் என் பூர்வ வரலாற்றைப் பற்றிச் சொன்னது கிடையாது. என் அருமைக் கௌசல்யாவுக்குக் கூடச் சொன்னதில்லை. நான் உண்மையிலேயே ராணி தான். இப்பொழுது இந்தத் தேசத்தை ஆளும் ராஜா வீரவர்மரின் தர்ம பத்தினி நான்! விவாகமாகிப் பல வருஷங்கள் ஆகியும் எனக்குக் குழந்தையே பிறக்காமற் போகவே, அரசருக்கு மனங் கசந்து விட்டது. அவர் சுந்தரி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். அவள் அரண்மனைக்கு வந்த சில நாட்களுக்கெல்லாம் என்னை நகரத்தை விட்டுக் கடத்திவிடச் சூழ்ச்சி செய்து அரசரையும் அதற்கு இணங்கச் செய்து விட்டாள். அரசர் மிகவும் வஞ்சகமாக என்னை அரண்மனையிலிருந்து வெளியேற்றி விட்டார்; என்னோடு தாமும் சிறிது காலம் வனவாசம் செய்தார்; அப்புறம் விட்டுப் பிரிந்து விட்டார். பிறகு இந்தக் குடிசையில் வாழ வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. இது நடந்து பல வருஷங்கள் ஆகிவிட்டன. நான் அந்தப் பழைய சம்பவங்களையெல்லாம் அடியோடு மறந்து விடத் தான் முயல்கிறேன். ஆனால் முடியவில்லை. கௌசல்யாவிடம் கூட இத்தனை நாளாக நான் இந்த உண்மையைச் சொன்னதில்லை. இனிமேல் சொல்வதிலும் பயன் ஒன்றும் இல்லை. அதெல்லாம் எத்தனையோ நாட்களுக்கு முன் சென்று போன சம்பவங்கள்!" என்று கூறிவிட்டுக் கௌசல்யாவின் தாயாரான ராணி மல்லிகா கண் கலங்கினாள்.

"மகாராணி, தங்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை என்ற காரணத்தினால்தானே அரசர் தங்களை அரண்மனையை விட்டு வெளியேற்றினார்! கௌசல்யா பிறந்த செய்தி அரசருக்குத் தெரியாதா?" என்று ராஜா வேதனை கலந்த குரலில் கேட்டான்.

கௌசல்யாவுக்குத் தான் உண்மையில் ஒரு ராஜகுமாரி என்று தெரிந்ததும் பேசும் சக்தியையே இழந்து விட்டாள். ஆச்சரியத்தோடு துக்கமும் எழுந்து அவளைப் பேச விடவில்லை.

மல்லிகா ராஜாவின் தலையை அன்போடு வருடிக் கொண்டே, சொன்னாள்: "அப்பா, ராஜா! கௌசல்யா பிறந்தது அவருக்குத் தெரியாது. நான் அவருக்குப் பல முறை தாதிப் பெண்கள் மூலம் செய்தி அனுப்பினேன். இளையராணி சுந்தரி அந்தச் செய்திகளை யெல்லாம் அரசர் செவியில் எட்டாமல் தடுத்து விட்டாள் என்று தோன்றுகிறது.

"கௌசல்யா பிறந்த சில மாதங்களுக்குப் பிறகு, இளைய ராணி—அரசர் இருவருடைய கட்டளையின்படி நான் வன மாளிகையை விட்டு வனத்துக்கே போக நேர்ந்தது. வனவாசத்தில் பல கஷ்டங்கள் அநுபவித்தேன். கௌசல்யாவுக்காக அவற்றை யெல்லாம் மிகவும் பொறுமையோடு சகித்துக் கொண்டு, இந்த ஊரில் குடி புகுந்தேன். அப்புறம் உன் தகப்பனார் - உபாத்தியாயர் நித்தியானந்தம் செய்த உதவியினால் கௌசல்யாவைப் பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்க முடிந்தது!"

ராணி மல்லிகாவின் கண்களில் கண்ணீர் பெருகியது. கௌசல்யா கண்களைத் துடைத்துக் கொண்டாள். ராஜாவின் கண்களும் கலங்கியிருந்தன.

"அம்மா, நீங்கள் வருத்தப் படாதீர்கள். நீங்கள் மீண்டும் பழைய நிலையை அடைவீர்கள். அரசர் செய்த இந்த அநீதியை எதிர்த்துப் போராட நான் என்றும் சித்தமா யிருக்கிறேன்!" என்று வீரத்தோடு சொன்னான் ராஜா.

இந்தச் சம்பவம் நடந்து, ரொம்ப நாட்கள் ஓடி விட்டன. சிறுமியா யிருந்த கௌசல்யா இப்போது குமாரியாகி விட்டாள். முன்னைக் காட்டிலும் அவள் அழகு அதிகமாக இப்பொழுது பிரகாசித்தது.

ராஜாவும் இப்பொழுது சிறு பையனா யில்லை. தீர நெஞ்சமும் திடகாத்திரமும் கொண்ட அழகிய வாலிபனாகி விட்டான். குழந்தைப் பருவத்திலும் பின்னைப் பிராயத்திலும் அவன் அழகிய கன்னங்களில் விழுந்த குழி அவனுக்கு மிகவும் கவர்ச்சியைக் கொடுத்தது; இப்போது வாலிப வயதில் கம்பீரத்தையும் கொடுத்தது. அவன் இப்போது சின்னக் குதிரையில் ஏறுவதை விட்டுப் பெரிய குதிரையிலேயே தீரமாகச் சவாரி செய்ய ஆரம்பித்தான்.

கௌசல்யா இப்போதெல்லாம் ராஜாவினிடம் மூச்சு விடாமல் பேசுவதில்லை. ஆனால் அவள் பேச வேண்டிய விஷயங்களை யெல்லாம் அவளுடைய பெரிய விழிகள் இரண்டும் அவனிடம் வெகு விளக்கமாகப் பேசிவிடும்.

"ராஜா, அம்மா முன்பு ஒரு சமயம் தன் உண்மை வரலாற்றைச் சொன்னதிலிருந்து என் மனம் படும் பாட்டைச் சொல்லி முடியாது. அம்மாவின் வேதனை நீங்க வேண்டுமானால் அவளுக்கு உண்மையில் உரிய இந்தத் தேசத்தை அவளிடம் ஒப்படைக்க வேண்டும். இந்த ஊர் அரசனை — என் தந்தையை — மன்னிப்புக் கேட்கும்படி செய்ய வேண்டும்!" என்று ஒரு நாள் கௌசல்யா மனம் நொந்து போய் ராஜாவினிடம் சொன்னாள்.

ராஜா மனம் நெகிழ்ந்து போனான்.

"கௌசல்யா, உன் விருப்பத்தை நான் எப்படியாவது செய்து முடிக்கிறேன். அப்புறம் யுவராணியாகி விட்ட உனக்கு இந்த ஏழை, அநாதை ராஜாவின் நினைவு வருமா? நான் பெயருக்குத்தானே ராஜா? ஒரு காலத்தில் நாம் இருவரும் சேர்ந்து பழகி விளையாடின தெல்லாம் நினைத்துப் பார்க்கத்தான் தோன்றுமா?"

"ராஜா, என் மனசை என்னத்துக்காக இப்படிப் புண்படுத்துகிறீர்கள்? இனி உங்களை மறப்பது என்பது இந்த ஜன்மத்தில் இல்லை. அரச போகத்தையும் அரண்மனை வாழ்வையும் மீண்டும் அடைவதனால் உங்களைப் பிரிய நேரும் என்றால், இந்தப் பட்டிக்காட்டு வாசமே எனக்குப் பிடித்திருக்கிறது. நீங்கள் இல்லாத வாழ்வு சந்திரன் இல்லாத வானத்துக்குச் சமமாகும்!" என்று உணர்ச்சி மிகுந்த குரலில் சொன்னாள் கௌசல்யா.

ராஜாவுக்கும், உணர்ச்சி மிகுதியால் கண்களில் நீர் பெருகிப் பார்க்கும் பொருளை யெல்லாம் மறைத்தது.

"கௌசல்யா, உன்னை எப்படியாவது, உனக்கு உரிய அரண்மனையில் சேர்த்துவிட வேண்டும் என்று எனக்கு இருக்கும் ஆசையைச் சொல்லிமுடியாது. ஆனால் அதை எப்படிச் செய்வது என்னும் வழிதான் எனக்குப் புலப்பட வில்லை. நானும் எவ்வளவோ



யோசித்து யோசித்து மூளையைக் குழப்பிக் கொள்ளுகிறேன். ஏழை உபாத்தியாயரின் மகளை நான், ராஜா வீரவர்மரை எப்படி நேரில் காண முடியும்? அரண்மனை வாசலிலேயே என்னை நுழைய விடமாட்டார்களே! உள்ளே விட்டாலும் பாதகம் இல்லை. சிறையில் அல்லவா அடைத்து விடுவார்கள்!'' என்றான் ராஜா.

''ஆமாம், நீங்கள் சொல்லுவது உண்மைதான். அரண்மனைக்குள் நீங்கள் போவது இலேசான காரியமல்ல. நானும் அம்மாவும் போனால் கூட அதேமாதிரிதான் நடக்கும். என் தகப்பனார் என்னைத் தெரிந்து கொள்ளுகிற வரையில் மிகவும் சிரமம்தான்!'' என்றாள் கௌசல்யா.

ராஜா அவளை அன்போடு ஒரு தடவை பார்த்தான். பிறகு பெருமூச்செறிந்தான்.

''கௌசல்யா, மன்னர் மகளான உன்னை முதலிலே நான் எப்படியோ தெரிந்து கொண்டேன். உன் முகத்தில் விளங்கும் ராஜவம்சத்துக் களையும், ரூபசௌந்தரியமும் உன்னிடம் சின்னஞ்சிறு வயதிலிருந்தே இருந்து வருகின்றன. நீயும் என்னைப் போல் ஒரு ஏழை, அநாதை என்று அறிந்த போது நான் அடைந்த சந்தோஷத்தைச் சொல்லி முடியாது. நீ நிஜமாக ராஜகுமாரி என்று தெரிந்ததும் என் மனதில் ஏனோ அவ்வளவு மகிழ்ச்சி உண்டாக மாட்டேன் என்கிறது!

''கௌசல்யா, நாம் கந்தர்வர்களாக மாறி உடனே நமக்கு வான வீதியில் பறக்கும் சக்தி வந்து விடாதா என்று தோன்றுகிறது. அப்பொழுது நான் என்ன செய்வேன் தெரியுமா? உன்னையும் அழைத்துக் கொண்டு வானத்தில் பறந்து வெள்ளி நிலாப்படகில் ஏறிப் பவனி வருவேன். உம்! மனக்கோட்டை கட்டுவதினால் என்ன பிரயோஜனம்!'' என்று கூறி ராஜா அலுத்துக் கொண்டான்.

''ராஜா, எனக்கு நாம் இருவரும் கிளிகளாக மாறிவிட்டால் என்ன என்று தோன்றுகிறது. கானகத்துக் கனி வர்க்கங்களைத் தின்று மனம் போன போக்கிலெல்லாம் பறந்து திரிந்து ஓடி ஆடி உல்லாசமாயிருக்கலாமே! பறவைகளின் வாழ்க்கையில் இந்த மனித வாழ்க்கையில் ஏற்படும் சங்கடங்கள் எதுவும் கிடையாது அல்லவா?''

''கௌசல்யா, நீ சொல்வது உண்மை. நாம் இருவரும் கிளிகளாகி விட்டால் இங்கே என்னத்திற்காக உட்கார்ந்து வேதனைப் படப் போகிறோம்! என் தகப்பனார் உன்னைப் பற்றியும் உன்னுடைய நிஜ வாழ்க்கையையும் பற்றித் தெரிந்து கொண்டதிலிருந்து அரண்மனைக்குப் போய் அரசரைக் கண்டு பேச மிகவும் ஆவலுடன் இருக்கிறார். சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். அப்புறம் கௌசல்யா, இந்த ஏழை ராஜாவை மறந்து விட மாட்டாயே!''

''ராஜா, நீங்கள் அந்த மாதிரி கேட்கவே கூடாது. நீர் நிலையை விட்டு அப்புறப் படுத்தினால், மீன் குட்டி உயிர் வாழ்ந்திருக்குமா? என்னை மறுபடியும் மறுபடியும் சோதனை செய்ய வேண்டாம். உங்கள் வாழ்வு என் வாழ்வு. நீங்கள் எனக்கு ராஜா. நான் உங்களுக்கு ராணி. இதில் எள்ளளவும் சந்தேகம் வேண்டாம்!'' என்றாள் கௌசல்யா.

உடனே ராஜா அன்போடு அவள் மலர்க் கரங்களைப் பற்றினான்.

அப்போது அவர்களுக்குப் பின்னாலிருந்த மகிழ மரம் 'பொலபொல' என்று அவர்கள் மீது மலர்களைப் பொழிந்தது. (தொடரும்)

## ஸரஸ்வதி வித்யாலயம்

சென்ற பிப்ரவரி மாதம் 22-ம் தேதி புனாவிலிருக்கும் ஸரஸ்வதி வித்யாலயம் என்னும் தமிழர் உயர்தரப் பள்ளியின் சொந்தக் கட்டிடத்தின் அஸ்திவார விழா, புனா சர்வ கலாசாலை உப அத்யக்ஷகர் ஸ்ரீ எம். ஆர். ஜயகரின் தலைமையில் வெகு சிறப்பாக நடை பெற்றது.

மேற்படி வித்தியாலயம் சென்ற 26 ஆண்டுகளாகப் புனா வாழ் தமிழர்களின் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் தொண்டை செய்து வந்திருக்கிறது. மேற்படி வித்யாலயத்திற்குச் சொந்தக் கட்டடத்திற்கான நிதியைப் புனாவாசிகள், நாடகங்கள் நடத்தியும், கச்சேரிகள் ஏற்பாடு செய்தும் திரட்டி வருகிறார்கள். புனாவாசிகளின் ஒத்துழைப்பினால் கூடிய விரைவில் முழுக் கட்டடமும் உருவாகி விடும் என்று எதிர்பார்க்கிறோம்.



முற்றிலும்
மாறுபட்ட கதை..

சிலேடைச்
சித்திரம்.........

நாகரீகமான
பொழுது போக்கு.

என்று வடஇந்தியப்
பத்திரிகைகளால் புகழப்பட்ட

ஜெமினியின்
மிஸ்டர்
சம்பத்
ஹிந்தி

இப்பொழுது
சென்னை
வெலிங்டனில்
வெற்றியுடன் நடைபெறுகிறது

தினசரி 3 காட்சிகள் - 3, 6-15, 9-30



அஞ்சுகத்திடம் செய்த சபதம் வெற்றி கண்டதில் மாணிக்கத்துக்குக் கொள்ளை மகிழ்ச்சியும் பெருமையும் களித்தது.

"மச்சான், உங்க சபதம் நிறைவேறிட்டாப் போதுமின்னு மஞ்சி விரட்டின்போது எங்க மயிலைக்கு வீறு தணியும் விதத்தில் பச்சிலை ஒன்னு அரைச்சுக் கொடுத்தேன். ஓங்க சபதமும் நிறைவேறிடுச்சு. நீங்களும் எனக்குக் கிடைச்சிங்க. என் கனவும் பலிச்சுது..." என்று ஒரு நாள் உணர்ச்சி பூர்வமாகக் குழைவுடன் பேசிய அஞ்சுகத்துக்குத் தன் மீதுள்ள அந்தரங்கக் காதலை, அளக்க முடியாத அன்பை எண்ணி எண்ணிப் பூரித்துப் போனான், மாணிக்கம்.

'அப்படிப்பட்ட அஞ்சுகமா இப்படி எங்கிட்டே நடந்துக்கிட்டா...எல்லாம் கனாப்போல இருக்குதே...' என்று மாணிக்கம் மீண்டும் குழம்பினான்.

புயலின் அடையாளமே இன்றி, இருந்திருந்தாற் போலக் கிளம்பியது அந்தப் புயல்!

சந்தைக்குத் தேங்காய் வியாபாரத்திற்கு வண்டி கட்டிப் புறப்பட்டுக் கொண்டிருந்தான் மாணிக்கம். அஞ்சுகம் ஓடிவந்து தனக்குக் கண்டாங்கிச் சேலை வாங்கி வருமாறு ஞாபக மூட்டினாள். இரவு அவன் சந்தையிலிருந்து திரும்பிவந்ததும் ஞாபகமாக, ஆசையுடன் அஞ்சுகம் அவனிடம் ஓடி வந்தாள்.

"மச்சான், நான் சொன்னது. அதுதான், எனக்குக் கண்டாங்கி வாங்கியாந்தீங்களா? கொட்டடியா! இல்லே பூப்போட்டதா!..." என்று அடுக்கிக்கொண்டே போனாள்.

"இந்தா, இதான் இன்னிக்கு வாங்க முடிஞ்சது. இது நம்ப புள்ளை ராசாத்திக்கு. மேலைக்கு உனக்குக் கட்டாயம் சேலை வாங்கித் தாரேன்..." என்றான் மாணிக்கம் பொங்கும் துயரச் சுமையுடன்.

"மேலைக்கா எனக்குச் சேலை வாங்கித் தாரீங்க! பின்னே இதை மட்டும் ஏன் வாங்கணும்! இந்தச் சட்டைத் துணி இல்லாமத்தானா மகள் ஏங்கி அழுவுது....!" என்று ஆத்திரமாக வார்த்தைகளை வீசி எறிந்த அஞ்சுகம், கையில் பிரித்து வைத்திருந்த குழந்தையின் சட்டையையும் தூர வீசி எறிந்தாள். மாணிக்கத்திற்கு இதைக் கண்டதும் ஆத்திரம் பொங்கி வந்தது.

"என்னையா அலட்சியம் செய்திட்டே! எம்மாம் திமிரு ஒனக்கு!" என்று ஓலமிட்டவாறு முன் அறை பின் அறையாக, அஞ்சுகத்தை நையப் புடைத்தான் மாணிக்கம்.

மறுகணம் அஞ்சுகம் தன் மகளை வாரி எடுத்துக் கொண்டு 'விசுக்' கென்று புறப்பட்டாள்.

"ஏலே, எங்கே போறே என் மகளையும் தூக்கிக்கிட்டு!"

"எம் மகளைத் தூக்கிக்கிட்டு என் ஆத்தா வீட்டுக்குப் போறேன்......"

"சீ மூதேவி! என் மகளை நீ எடுத்துப் போறதுக்கு ஒனக்குத் துப்பில்லே. ராசாத்தியை நீ தொட்டே, கையை முறிச்சுப் போடுவேன்! ஆமாம், சொல்லிப் பிட்டேன். நீ நட, ஒன் போக்குப் போலே..." என்று உறுமிய மாணிக்கம் குழந்தையை அவளிடமிருந்து பிடுங்கிக் கொண்டான். அஞ்சுகம் வழி நடந்தாள், கனத்துக் கிடந்த இருண்ட இரவில்.



'கண்டாங்கிச் சேலை வேணுமாமே, பூலோக ரம்பைக்கு! சந்தையிலே தேங்காய் வியாபாரத்திலே கெடச்ச பணம் நூறும் அப்படியே அலக்காப் பறிபோய்ப் பதைச்சுப் போய் வந்தவனை ஆறுதலா ஒண்ணும் கேக்காம, எடுத்ததும் சேலை தானா பேச்சு! புருசன் மேலே கவலை இருக்கிற பொம்பளையா இவ! துப்புக்கெட்ட கழுதை! ஆத்தா வீடு கூப்பிடுதாக்கும்! போகட்டும் போக்கத்தவ. 'போன மச்சான் திரும்பி வந்தான் பூமணத்தோட'ங்கிற கதையா அவமட்டும் 'எங்கிட்டே திரும்பி வந்துதானே தீரணும்' என்று இப்படிப் பல எண்ணிய மாணிக்கம் அன்று இரவு முழுவதும் எண்ணப் புயலினூடே சிக்கித் தவியாய்த் தவித்தான்.

மின்னல் துள்ளுவதுபோல, மகள் நினைவு அவனுக்கு நெஞ்சில் பளிச்சிட்டது. வழி மேல் இருந்த கடையில் பழம் ஒரு சீப்பும், முறுக்கும் பட்சணமும் குழந்தை ராசாத்திக்கு வாங்கிக் கொண்டு வீட்டுக்கு ஓடினான். அப்பொழுது அவனுக்குத் தன் ஒரே மகளைப் பற்றிய இன்ப நினைவு தான் மனசில் இடம் பெற்று, அதுவே அப்போதைய அவனது உலகமாக மிகவும் உறுதியாக நிலைபெற்றிருந்தது.

"தம்பி, வழியிலே உன் மகள் ராசாத்தியைக் கண்டாயா? ராசாத்தி கொஞ்ச முந்திதான் எங்கிட்டே சமத்தா சோறு வாங்கிக் கிட்டுது. வாசலிலே விளையாடுச்சு. உள்ளே போய் வெத்திலைப் பெட்டி எடுத்தாந்து பார்த்தேன். அவளைக் காணோம்!" என்றாள் அவன் தாயார்.

தாயின் வார்த்தைகளைக் கேட்ட மாணிக்கம் அப்படியே பதறிப் போனான்; சித்தம் நிலை குலைந்தது. அருமைப் பெண்ணுக்கென்று ஆசையுடன் வாங்கிவந்திருந்த பழம், முறுக்கு எல்லாம் தரையில் சிதறி விழுந்தன.

"ராசாத்தி! ராசாத்தி!" என்று அலறிக் கொண்டே அவன் கிறுக்கனைப் போல வழியெல்லாம் ஓடினான். நேரம் தேய்ந்தது. விடிநிலா மட்டும் தேயவில்லை; வளர்ச்சி பெற்றிருந்தது.

எங்கும் அவன் தன் மகளைக் காண முடியவில்லை. அவனுக்குக் கண்களில் கண்ணீர் நிரம்பி வழிந்தவாறு இருந்தது.

அன்று அவன் மனைவி கோபித்துக் கொண்டு புறப்பட்ட தருணம் அவள் தன் மகளை எடுத்துச் செல்ல எத்தனிக்க, அவன் வலுக்கட்டாயமாக மகளை அவளிடமிருந்து பிரித்துத் தன்னிடம் வைத்துக் கொண்ட சம்பவம் அவன் நினைவில் எழுந்தது. இரவெல்லாம் குழந்தை "அம்மா! அம்மா!" என்று மாளாமல் அலறி அழுததையும் அவன் நினைத்துக் கொண்டான். பால் மணம் மாறாத குழந்தையாயிற்றே பாவம், அது!

"மாணிக்கம், ராசாத்தியைக் கண்டியா! இந்தச் சங்கதியைக் கேட்டியா! கொஞ்ச முந்தி தாயோடே சின்ன செவலைக் கன்னுக் குட்டியையும் காணவில்லே. எல்லாம் சோதனைக் கணக்கிலே கண் சிமிட்டுறதுக் குள்ளாற நடந்திருக்குதே!" என்றாள் கிழவி துயரம் பொங்க.

மாணிக்கம் சுயபுத்தியை இழந்தவன் போலானான். குழந்தையையும், கன்றையும் ஒரே சமயம் காணோமென்றால் யார் மனம்தான்

அவதிப்பட மாட்டாது! எங்கெங்கோ ஓடினான்; அலைந்தான். தெரிந்தவர்களை யெல்லாம் எழுப்பினான்; கேட்டான். பலன் இல்லை. குழந்தையையும் காணவில்லை; கன்றும் தட்டுப்படவில்லை.

“ஐயோ, ராசாத்தி! நீ இத்தனை நேரம் எங்கே இருந்துக்கிட்டுக் கலங்கி அழுவுறியோ! ஒண்ணும் அறியாப் பருவமாச்சே, தெய்வமே! காளி ஆத்தா! என் குழந்தையைக் காப்பாத்து....ஆ! இது அஞ்சகத்துக்குத் தெரிஞ்சா, மகளைக் காணும அவ உசிரு உடலிலே தரிக்காதே! அவகிட்டே நான் என்ன பதில் சொல்லுவேன்! அவளை அடிச்சுத் துரத்தாட்டி எங்கண்ணு ராசாத்தி இப்படிக் காணாமப் போயிருக்காது தான்......” என்று எண்ணி உருக்குலைந்த மாணிக்கம் வீட்டை அடைந்தான். தொழுவத்தில் நின்ற தாய்ப் பசு ‘ம்மா’ என்று கத்திக் கொண்டிருந்தது. பிரிந்து போய் விட்ட தன் கன்றை நினைத்து. அக் காட்சியைக் கண்டது தான் தாமதம், ‘ஐயோ, ராசாத்தி’ என்று ஓவென்று அலறிவிட்டான் மாணிக்கம்.

மறுபடியும் அவன் கண்களைத் திறந்து பார்க்கையில், பொழுது விடிந்திருந்தது. என்ன ஆச்சரியம்! தாய்ப் பசுவின் அருகே அதன் கன்று நின்று பால் குடித்துக் கொண்டிருந்தது. தாய்ப்பசு, கன்றை எட்டியணைத்து அதன் தலையை நக்கிக் கொண்டிருந்தது. அவனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. கண்களில் கண்ணீர் கரந்தது.

“தம்பி, கேட்டியா சேதியை! நம்ப கண்ணைக்

மெடுத்தது. தாய் உள்ளத்தின் விந்தையை அப்போதுதான் மாணிக்கத்தின் தந்தை மனம் புரிந்து கொள்ள முடிந்தது.

“தம்பி, ராத்திரிக்கு நகரம் கோவிலிலே உத்தரம். எல்லாரும் போல நாமளும் இந்த வாட்டியும் குடும்பத்தோட திருநாளுக்குப் போகணும். அஞ்சகம் மனை மிதிச்ச நாளா நம்ப வீடு திருவௌக் கேத்தி வௌங்குது. அவளை இப்பவே போய்க் கையோட அழைச்சுக்கிட்டு வந்துடு. நம்ப ராசாத்தியும் கண்ணுன்னே நிக்குது. இன்னெண்ணு. அஞ்சகம் ஆசைப்பட்டது மாதிரி அதே கண்டாங்கிச் சேலை இதோ, இருக்கு. பார்வதிகிட்டே ரெண்டு சேலை இருந்துச்சு, ஒண்ணை நான் வாங்கியாந்தேன். பணத்தை அடுத்த மாசம் கொடுத்துக்கலாம். வண்டியைப் பூட்டிக்கிட்டுப் புறப்படு தம்பி. அஞ்சகம் வந்து, ராசாத்தியை நீ கண்டாத்தான் ஒனக்கும் மூஞ்சியிலே களை தட்டும், பெத்தவ சொல்லைத் தட்டாதே. ஓடு...” என்றான் கிழவி உணர்ச்சி வசப்பட்டவளாக.

தான் எண்ணிய விதம் போலவே தன் தாயும் எண்ணியிருந்தது மாணிக்கத்துக்கு அளவற்ற வியப்பைத் தந்தது.

அவன் வண்டியைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டான். அப்பொழுது “மச்சான்” என்ற குயில் குரலொன்று காவில் ஒலிப்பது போல நாதமிழைத்துக் கிளம்பியது. அங்கே குழந்தையும்




மாயவரம் ஜங்ஷனில் ரயில் வந்து நின்றது. மிகுந்த பரபரப்புடன் ஜன்னலிலிருந்தே தக[redacted]

விட்டு, முதல் பிளாட்பாரத்தில் இருந்த ஐ. ஆர். ரூமில் ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டு வரலாம் என்று ரயிலிலிருந்து இறங்கினேன். மாயவரம் ஜங்ஷனுக்கு எவ்வளவு பெயர் போனதோ அப்படியேதான் காப்பிக்கும்! அதிலும் அப்போதெல்லாம் ஐ. ஆர். ரூம் காப்பி என்றால் தனி விசேஷந்தான்.

காலை மணி ஒன்பதரை இருக்கும். வெளியில் வெய்யில் பளீரென்று உக்கிரமாகவே அடித்து ஸ்டேஷனை கருகருப்பாக வைத்திருந்தது. பட்ட

பட்டுவிட்டது. 'ரெப்ரெஷ்மெண்ட் ரூம்' காப்பி நிறம் என்னை மறந்து விடாமல் வா, வா, என்று அழைத்தது. மேலே செல்ல யத்தனித்தேன்.

ஏனோ மீண்டும் பார்வை ஒரு கணம் பிளாட்பாரத்தில் நிலைத்தது. பட்டணம் போகும் வண்டியும், வந்த வண்டியும் எதிரெதிராக, பிளாட்பாரத்திற்கு அழகு செய்து கொண்டு நின்றன. நான் ஏறியிருந்த பெட்டிக்கு நேர் எதிரே கும்பகோணம் வண்டியில், ஸ்திரீகள் கம்பார்ட்மெண்ட் இருப்பதைக் கவனித்தேன். அதைக்கூட அவ்வளவு உன்னிப்பாகப் பார்த்திருக்க மாட்டேன். அதிலிருந்து கீழே இறங்கிய ஒரு ஸ்திரீயைப் பார்த்த போது நான் திடுக்கிட்டேன். என்னைப் போலவே, அவளும் மாயவரத்தில் இறங்குபவள் இல்லை என்று ஊகித்துக் கொண்டேன். சற்று அருகிலிருந்த பழ ஸ்டாலுக்கு அவள் நகர்ந்தபொழுதுதான் அவளைச் சரியாகப் பார்க்க முடிந்தது என்னால்!

நிச்சயமாக அவள் மீனுதான். மீனு ஒருத்திக்குத்தான் அந்த எழிலுருவமும், ஒயிலான நடையும் உண்டு. ஒரு கணம் மனம் பேதலித்தது. காப்பியைக்கூட மறந்தேன். அருகில் சென்று குசலம் விசாரிக்கலாமா என்று தோன்றியது. ஆனால் அவளைப் போய் விசாரிக்க எனக்கு என்ன பாத்தியதை! ஒரு வேளை அவள் என்னைத் [illegible]

ஏறியிருந்த பெட்டிக்கு நேர் எதிரே கும்பகோணம் வண்டியில், ஸ்திரீகள் கம்பார்ட்மெண்ட் இருப்பதைக் கவனித்தேன். அதைக்கூட அவ்வளவு உன்னிப்பாகப் பார்த்திருக்க மாட்டேன். அதிலிருந்து கீழே இறங்கிய ஒரு ஸ்திரீயைப் பார்த்த போது நான் திடுக்கிட்டேன். என்னைப் போலவே, அவளும் மாயவரத்தில் இறங்குபவள் இல்லை என்று ஊகித்துக் கொண்டேன். சற்று அருகிலிருந்த பழ ஸ்டாலுக்கு அவள் நகர்ந்தபொழுதுதான் அவளைச் சரியாகப் பார்க்க முடிந்தது என்னால்!

நிச்சயமாக அவள் மீனுதான். மீனு ஒருத்திக்குத்தான் அந்த எழிலுருவமும், ஒயிலான நடையும் உண்டு. ஒரு கணம் மனம் பேதலித்தது. காப்பியைக்கூட மறந்தேன். அருகில் சென்று குசலம் விசாரிக்கலாமா என்று தோன்றியது. ஆனால் அவளைப் போய் விசாரிக்க எனக்கு என்ன பாத்தியதை! ஒரு வேளை அவள் என்னைத்
தெரிந்து கொள்ளாமல் முகம் கோண ஏதாவது சொல்லி விட்டால்......!

மனம் எண்ணங்களைப் போட்டு அலைத்தது. பாலத்தைக் கடந்து சிற்றுண்டிச் சாலையில் நுழைந்து ஒரு கப் ஸ்டிராங் காப்பிக்கும் ஆர்டர் செய்து விட்டேன். சற்று முன்பு யாராவது தெரிந்தவர்களைப் பார்க்க மாட்டோமா என்று மனம் அடித்துக் கொண்டது. இப்போதோ! மீனுவை நேருக்கு நேர் சந்தித்து விடுவோமா என்ற தயக்கம் என்னுள் தலைகாட்டியது. பல வருஷங்களுக்குப் பிறகு, அதுவும் இந்த நிலையில், அவளைச் சந்திக்காமல் இருந்து விட்டால்தான் என்ன! பழைய நினைவுகள் அழகாக அணி வகுத்து மன அரங்கத்தில் நர்த்தனமிட்டன!

போவது தெரியாமல் அரட்டை யடித்துக் கொண்டிருப்பேன்.

இந்தப் பேச்சும், கும்மாளமும் அவளுக்கு விவாகம் ஆகும் வரையில் தான். மீனு அப்பா சாஸ்திரோக்தமான மனிதராகையால், அவள் கலியாணத்தைச் சீக்கிரமே முடித்துவிட எண்ணினார். அடேயப்பா, அந்தக் கலியாணத்தைத்தான் எவ்வளவு சம்பிரமமாக நடத்தினார் அவர்! தம்முடைய அந்தஸ்தையும் செல்வாக்கையும் கொண்டு, அந்த வட்டாரத்திலேயே [illegible]

மும் அவளுக்கு விவாகம் ஆகும் வரையில் தான். மீனு அப்பா சாஸ்திரோக்தமான மனிதராகையால், அவள் கலியாணத்தைச் சீக்கிரமே முடித்துவிட எண்ணினார். அடேயப்பா, அந்தக் கலியாணத்தைத்தான் எவ்வளவு சம்பிரமமாக நடத்தினார் அவர்! தம்முடைய அந்தஸ்தையும் செல்வாக்கையும் கொண்டு, அந்த வட்
டாரத்திலேயே யாரும் கண்டிராத விமரிசையான கலியாணமாக நடத்தி விட்டார் அவர். நாலு நாளும் அமோகமாக விருந்தும், கச்சேரிகளும் இடைவிடாது மாறி மாறி நடைபெற்றன. சங்கரனுக்கும் எனக்கும்தான் கலியாணத்தின் போது சரியான வேலை. ஓடியாடி வந்திருந்தவர்களையெல்லாம் கவனித்துக் கொண்டு எங்கள் பங்கையும் உற்சாகமாக நிறைவேற்றி வைத்தோம். என்னுடைய சொந்தத் தங்கையின் கலியாணமாகவே நான் அதை எண்ணிக் கொண்டேன். புக்ககம் செல்லும் தினத்தன்று மீனு எல்லோருக்கும் நமஸ்காரம் செய்து விடை பெற்றுக் கொண்டாள். நானும் ஒரு ஓரத்தில் நின்று கொண்டிருந்தேன்.

"கோபு, அண்ணா! உனக்கும் நமஸ்காரம் பண்ணறேன் [illegible]

பொய்க் கோபத்துடன் சிணுங்கினாள். நானும் மீனுவின் கணவரும் பேசாது வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம். கமலி சற்று நேரம் கழித்துச் சும்மா இருக்கவில்லை. பதிலைச் சிறிது நேரம் யோசித்தாள் போலும்!

"அக்கா, பொண் பிறந்தா தள்ளிவிடவா போறோம்! உங்க வாக்குப்படியே பெண் பிறந்தாலும் சரி; பின்னே பிறந்தாக்கூட நீங்களே ஸ்வீகாரம் எடுத்துண்டு வளர்த்துடுங்கோ; நான் தடை சொல்லவில்லை."

கமலி யதார்த்தமாகத்தான் சொன்னாள் இதை. மீனுவின் முகத்தில் பயங்கர மாறுதல் ஏற்பட்டு விட்டது. அதை வேறு விதமாக எடுத்துக் கொண்டு விட்டாள் அவள். அப்புறம் பேச்சு ரஸிக்க வில்லை. மனத்தில் சிறிய விஷ வித்து வேரூன்றிப் போய் விட்டது.

கமலுவும் மீனுவும் இந்த சம்பவத்திற்குப் பிறகு அக்காவும் மன்னியுமாகப் பழகிக் கொள்ளவில்லை. ஒருவருக்கொருவர் வேற்று மனிதர்கள் மாதிரியே ஆகிவிட்டனர். சில சமயம் சொந்தங்களைச் சரியா

காலக்கிரமத்தில் கமலி ஒரு ஆண் குழந்தையையே பெற்றெடுத்தாள். மீனு வந்து பார்க்க வேண்டும் என்று எனக்குக் கொள்ளை ஆசை. அழைப்பு அனுப்பினேன். அவர்கள் வராமலே இருந்து முகத்தில் அடித்து விட்டார்கள்.

"நான் அப்போதே சொல்லவில்லையா; அவளுக்குப் பொறாமை. இப்படி இருந்தால், இப்போது என்ன ஏழேழு தலைமுறைக்கும் குழந்தையே பிறக்காது! நீங்கதான் கிடந்து குதிக்கறேள்; சொந்தத் தங்கை பாழாய்ப் போகிற மாதிரி!" என்று தன் மனதிலிருந்த ஆத்திரத்தைக் கொட்டித் தீர்த்தாள் கமலி.

எனக்குக்கூட கமலியின் கட்சியில் நியாயம் இருப்பதாகத் தோன்றியது. இவ்வளவு நாட்கள் பழகிவிட்டு என் குழந்தையைக் கூடப் பார்க்க வராமல் அப்படி என்ன நான் துரோகம் செய்து விட்டேன்! நிஜமாகவே பொறாமைதான் மீனுவை இப்படிச் செய்து விட்டது என்று எண்ணினேன்.

பிறகு நாங்கள் சந்தித்துக் கொள்ளவே இல்லை. எனக்கும் மீண்டும் வட இந்திய வாசம்

" யாரு...கோபு அண்ணாவா ! நான்தான் மீனு" என்று தைரியமாகவே அவள் மூந்திக் கொண்டு விட்டாள். இனிமேல் தட்டிக் கழிக்க முடியாது என்று எண்ணியவனாய் அந்தப் பக்கம் நகர்ந்தேன். என் வண்டி கிளம்ப இன்னும் மூன்று நிமிஷங்களே இருந்தன.

" மீனு...நான் பார்க்கவில்லை உன்னை...எங்கே இவ்வளவு தூரம் !" என்று சம்பந்தமில்லாமல் பேசிக் கொண்டே வந்தவன் ரயிலினுள் பார்வையைச் செலுத்தினேன். அந்த வண்டியில் கூட்டமே இல்லை. மீனுவைப் போலவே சாயலுள்ள ஏழு வயதுப் பெண் ஒருத்தி சாமான்களைப் பார்த்துக் கொண்டும், பெஞ்சியின் மேல் கிடந்த கைக் குழந்தையைக் கவனித்துக் கொண்டும் அங்கே உட்கார்ந்திருந்தாள்.

" உன்னுடைய பெண்ணு, மீனு !" என்று கேட்டு வைத்தேன்.

" ஆமாம், அண்ணு ! அவதான் தலைச்சன். கையிலே பிள்ளைக் குழந்தை இப்போ. இந்த ஆனிக்கு இரண்டு வயசு ஆகிறது. நாங்கள் இப்போது கும்பகோணத்திலேயே இருக்கிறோம்" என்று மீனு விடை பகர்ந்தாள். அதோடு விடவில்லை அவள்.

" அதிருக்கட்டும், மன்னி, குழந்தை எல்லாரும் சௌக்கியம்தானே ! இன்னும் நீ வட இந்தியாவில் தானே இருக்கிறாய் !"

என் வண்டிக்கு மணி அடித்துப் பச்சைக் கொடியும் காட்டி விட்டார்கள். 'இதோ ரெடி' என்று அலறியது என்ஜின். என்னுள் ஏதோ ஒன்று பயங்கரமாகக் கூச்சலிடுவதாகவே நினைத்துக் கொண்டேன். பரபரப்புடன் ஓட்டமாக ஓடிப் போய் நகருகிற வண்டியில் தொத்திக் கொண்டேன். மீனுவுக்குப் பதில் சொல்லக் கூட நேரமில்லை. பல வருஷங்கள் கழித்துச் சந்தித்த உணர்ச்சிப் பெருக்கில் அவள் கண்களில் நீர் மல்கப் பரிதாபத்துடன் நின்ற காட்சி என் திருஷ்டியில் பனிப் படலமாக உறைந்தது. ஜன்னலிருந்து மீனுவின் பெண் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வண்டி வேகமாக நகர்ந்ததும் உள்ளே வந்தேன். பெட்டியைத் தூக்கி உயரே வைத்துவிட்டு ஜன்னல் ஓரமாக அமர்ந்தேன். ரயில், நெளிந்து நெளிந்து சமுத்திர ராஜனிடம் சங்கமமாகப் போகும் பூரிப்பில் ஓடிக் கொண்டிருக்கும் காவேரிப் பாலத்தின் மீது கடகடவென்று ஓடிக் கொண்டிருந்தது.

" நல்ல வேளை ; மீனுவுக்குச் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் என்ன வேதனைப் பட்டிருப்பாளோ ! மீனு தாய்மையை அடையாத ஒரு காலத்தில் கமலியும் நானும் இந்த உலகத்தையே லட்சியம் செய்யாமல் வாழ்வின் எதிர்காலத்தில் நம்பிக்கை வைத்திருந்தோம். என்ன சோதனை ! கமலியும் குழந்தையும் எனக்குத் தக்கவில்லை. கமலியை இழந்த பிறகு 'புத்' என்ற நரகத்திற்குப் போகத் தயாராய் இருந்தேனே தவிர, மறுமணம் செய்து கொள்ள விரும்பவில்லை. என் வாழ்க்கைதான் சூன்யமாகப் போய்விட்டது. மீனுவாவது சௌக்கியமாய் இருந்தால் சரி : என்ற நினைப்புத்தான் எனக்கு எஞ்சியது.

கண்களிலிருந்து இரண்டு சொட்டு நீர், களிப்புடன் ஓடும் காவேரிப் பிரவாகத்தில் கலந்தது. கண்களை நன்றாகத் துடைத்து விட்டுக் கொண்டேன் நான். மனம் பொருமியது ; ரயில் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது.

# குருகுலத்துக்கு உதவி

சென்ற டிசம்பர் மாதம் சோழ நாட்டில் அடித்த கொடும் புயலினால் வேதாரண்யம் கஸ்தூரிபா கன்யா குருகுலம் கடும் சோதனைக்கு உள்ளாயிற்று. ஏறக்குறைய எல்லாக் கட்டடங்களும் நாசமாகி விட்டன. இந்த விபத்தைக் குறித்து " அன்னை கண்ணீர் விடுகிறாள் " என்ற தலைப்பில் டிசம்பர் 21உ " கல்கி " இதழில் குறிப்பிட்டிருந்தோம்.

நூற்றைம்பது பெண் குழந்தைகளைக் காப்பாற்றிச் சிறந்த முறையில் கல்வி புகட்டி வரும் அந்த அருமையான ஸ்தாபனத்துக்குப் பல அன்பர்கள் நன்கொடை அளித்து உதவ முன்வந்ததை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். இதுவரை பின்வரும் நன்கொடைகள் கிடைத்திருக்கின்றன.

வேதாரண்யம், ஸ்ரீ எஸ். கே. சுப்பையா பிள்ளை ரூ. 550 ; கோபிச்செட்டிப் பாளையம், ஸ்ரீ கே. கே. சுப்பண்ண கவுண்டர் ரூ. 501 ; ஸ்ரீ முத்து வேலப்ப கவுண்டர் ரூ. 501 ; ஸ்ரீ பி. ஜி. கரித்திருமன் ரூ. 500 ; தஞ்சை ஜில்லா போர்டு ரூ. 500 ; கஸ்தூரிபா காந்தி நேஷனல் மெமோரியல் டிரஸ்ட் ரூ. 500 ; ரூரல் வெல்பேர் டிபார்ட்மெண்டு ரூ. 500 ; ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார் ரூ. 250 ; தூத்துக்குடி ஸ்ரீ எஸ். என். சின்னகண்ணுப் பிள்ளை ரூ. 250 ; ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் ரூ. 250 ; வேதாரண்யம் ஸ்ரீ அ. கு. சா. முத்துக் குமாரசாமிப் பிள்ளை ரூ. 200 ; லெப்டினண்ட் கவர்னர் ஸ்ரீ கே. சந்தானம் ரூ. 200 ; குத்தாலம் ஸ்ரீ என். ரங்கசாமி ரெட்டியார் ரூ. 150 ; பெரிய நாயக்கன் பாளையம் ஸ்ரீ க. அருணாசலம் ரூ. 100 ; கோலாலம்பூர் ஸ்ரீ சி. வி. சாமி ரூ. 100 ; ஜரிக்குப்பூர் ஸ்ரீ எஸ். நாராயண ராவ் ரூ. 50 ; இங்கூர் ஸ்ரீ இ. வி. முத்துசாமி ரூ. 50 ; பரோடா ஸ்ரீமதி ராஜம்மாள் தேவதாஸ் ரூ. 50 ;

ரூ. 25—0—0 : டாக்டர் எஸ்தர் நெல்சன், அமெரிக்கா ; ஸ்ரீ ஆர். எஸ். சுப்பிரமணியம், கல்கத்தா ; ஸ்ரீ ஏ. எஸ். ராஜகோபால ஐயங்கார், சிவகாசி.

ரூ. 20—0—0 : குமாரி ரூத்தும், ஸ்ரீமதி சாந்திதேவியும், காந்தி கிராமம் ; ரூ. 15—0—0 : ஸ்ரீ டி. எம். சேஷாத்திரி, புது டில்லி ; ரூ. 10—0—0 : ஸ்ரீ கே. வி. பி. பால், திருச்சி ; ஸ்ரீ ஏ. ராஜகோபாலன், ஆபூமலை, குஜராத் ; ஸ்ரீ என். எம். சுந்தரம், ஸ்ரீரங்கம் ; ரூ. 5—0—0 : ஸ்ரீ பெ. கல்யாணசுந்தரம், கும்பகோணம் ; ஸ்ரீ எஸ். ராமையா, கும்பகோணம்.

* * *

கன்யா குருகுலத்தைப் புனர் நிர்மாணம் செய்யும் புனித கைங்கரியத்துக்கு மேலும் பொருள் உதவி செய்ய விரும்புவோர் : " ஸ்ரீ ஏ. வேதரத்தினம், கஸ்தூரிபா கன்யா குருகுலம், வேதாரண்யம் " என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்.





புதுமை பெறுங்கள்!

மிருதுத் தன்மை பெறுங்கள்!



நீடித்த இனிமையுடன் இருங்கள்!

புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலின் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணமுள்ளது.

இந்தியாவின் தலைசிறந்த சைக்கிள் டயர்கள்



## சூப்பர் இந்தியா



# அதிர்ச்சி


பரிசுக் கதை : ஜான் க்ளியரி
(ஆஸ்திரேலியா)
மொழிபெயர்ப்பு : வாஞ்சி


டிபோராவின் வாழ்க்கைப் படகு எவ்விதத் தகராறுமின்றி ஆனந்தமாகச் சென்று கொண்டிருந்தது. பல பெண்களும் தன்னைக் கண்டு பொறாமைப் படுவதாக அவள் நினைத்தாள். தன்னைப் போல் அவர்களும் ஆனந்தமாக வாழ்க்கை நடத்துவதை யார் தடுத்தார்கள் என்று சிணுங்கினாள்.

மனைவி ஒழுங்காக இருந்தால் கணவன் ஒழுங்காக இருப்பதில்லை; கணவன் நல்லவனாக இருந்தால் மனைவி நல்லவளாக வாய்ப்பதில்லை. இவ்வாறு எத்தனையோ பொருத்தமற்ற தம்பதிகளை டிபோரா பார்த்திருக்கிறாள். இதை யெல்லாம் எண்ணியபோது டிபோராவுக்குப் பெருமை தாங்க முடியவில்லை. ஏனெனில் அவள் வாழ்க்கையிலும் அவளுடைய கணவன் ஹாவர்டின் வாழ்க்கையிலும் எவரும் யாதொரு களங்கமும் கூற முடியாது அல்லவா?

"கிளப் கட்டிடத்துக்குப் புதிய வர்ணம் கொடுத்திருக்கிறார்கள். எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்றான் ஹாவர்ட்.

"ஆமாம், இதெல்லாம் செய்வதற்கு யார் அனுமதி கொடுத்தார்கள்?" என்று கேட்டாள் டிபோரா.

"இஞ்ஜினீயர் கிளப்பின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும்போது யாருடைய அனுமதி வேண்டும்? அவர் கிளப்பில் இன்னும் பல அபிவிருத்திகள் செய்யப் போகிறார் என்று பெல்லமி சொன்னான்."

"பெல்லமியும் இன்றிரவு கிளப்புக்கு வருவாரா?"

"அவன் வராமலா? அவனுக்குக் கால்களும் கைகளும் சுவாதீனமற்றுப் போனால் கூட, அவன் மார்பால் ஊர்ந்து கொண்டே கிளப்புக்கு வந்து விடுவான்!"

"அப்படியானால் ஷைலாவும் வருவாள் அல்லவா?"

"கிளப்புக்கு வரக்கூடாது என்று அவன் ஷைலாவை நிலவறையில் வைத்துப் பூட்டினால் கூட, அவள் எப்படியாவது அவனை ஏமாற்றி விட்டு வந்து விடுவாள்" என்றான் ஹாவர்ட் சிரித்துக்கொண்டே.

பெல்லமி - ஷைலா தம்பதிகளைக் கண்டால் டிபோராவுக்கு வேடிக்கையாக இருக்கும். ஏனெனில் அவ்வளவு பொருத்தமற்ற தம்பதிகளை அவள் பார்த்ததேயில்லை. கிளப்பில் ஷைலா பெல்லமியையே ஆத்திரத்துடன் கவனித்துக் கொண்டிருப்பாள். அவன் கூறுவதை மறுத்து அதற்கு நேர் மாறாக ஏதாவது

சொல்லுவாள். எனவே, மேற்படி தகராறை வேடிக்கை பார்க்க டிபோரா தவறுவதே கிடையாது.

அதே சமயம் ஷைலா மிகவும் அழகியான தால், அவள் மீது டிபோராவுக்கு உள்ளூறப் பொருமையும் உண்டாயிற்று. அந்தப் பொருமை காரணமாக அவள் ஷைலாவை அலட்சியம் செய்து அவளிடம் தன் வெறுப்பைக் காட்டத் தவறுவதில்லை.

ஹாவர்டின் மோட்டார் கிளப்பை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

ஹாவர்ட் தம்பதிகள் நகரிலிருந்து பல மைல்கள் தூரத்துக்கு அப்பால் இருப்பதால், அவர்கள் மாதத்துக்கு இரண்டொரு தடவை தான் கிளப்புக்கு வருவது வழக்கம். ஹாவர்டைக் காட்டிலும் அதிக தூரத்தில் வசிப்பவர்கள் அடிக்கடி கிளப்புக்கு வரும்போது, ஹாவர்ட் மாத்திரம் அப்படிச் செய்வானேன்? அதற்கு முக்கிய காரணம் என்னவெனில், டிபோராவுக்குக் கிளப்பின் சூழ்நிலை சிறிதும் பிடிக்காததுதான்.

மோட்டாரில் ஹாவர்டின் பக்கத்தில் உட்கார்ந்து அவனுடன் வம்பு பேசிக்கொண்டே சென்ற டிபோரா எதிரில் உள்ள கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டாள்.

இதைக் கவனித்த ஹாவர்ட், "உன்னை யாரும் இருபது வயதான பெண் என்றே

தம்பதிகள் அந்த நகரிலேயே இருக்க முடியாது என்ற கர்வம் அவள் தலைக்கு ஏறியது.

* * *

கிளப்பில் ஓரே சந்தடியாக இருந்தது. பெண்கள் வாயளவில் சம்பிரதாயமாக ஒருவரை ஒருவர் புகழ்ந்தனர்.

அவர்களில் ஷைலா ஒருத்திதான் எல்லோருடனும் யதார்த்தமாகப் பேசினாள். மனதில் ஒன்றும் வாயில் ஒன்றும் வைத்துப் பேசாதவள் அவள்தான். அப்படியிருந்தும் மற்றவர்கள் கண்களைச் சிமிட்டி அவளைப் பரிகாசம் செய்தனர்.

ஷைலாவுடன் பேசிக்கொண்டிருந்த டிபோராவை ஹாவர்ட் திடீரென்று அப்பால் அழைத்துச் சென்று விட்டான். அதைக் கண்டு ஷைலாவின் முகம் சுருங்கியது.

டிபோரா ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, ஹாவர்ட் வேறு யாருடனோ பேசுவதற்காக வேறு பக்கம் சென்றான். அப்போது ஹாவர்டின் நண்பனான ரூனி டிபோராவுக்கு எதிரில் வந்து உட்கார்ந்து அவளைப் பேச்சுக்கு இழுத்தான்.

ரூனி, டிபோராவின் தோழியான பைல் என்ற பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டான். பைல் செல்வவந்தர் குடும்பத்தைச் சேர்ந்தவள் ஆதலால், அவ

அவனைப் பணத்துக்காக ஹிம்சிக்கவும் தொடங்கினான். அதனால் பைலின் வாழ்க்கை நரக வேதனையாகியது.

இதெல்லாம் டிபோராவுக்குத் தெரியுமாதலால், அவள் மூனியுடன் அதிகமாகப் பேச விரும்பவில்லை. அப்படியிருந்தும் அவன் பைல் மீது புகார் கூறி அவள் வாயைக் கிண்டியது டிபோராவுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது.

அவ்விதம் பேசிக் கொண்டே வந்த மூனி திடீரென்று, "டிபோரா! பைல் உன் கால் தூசிக்குக் கூட இணையாக மாட்டான்" என்று கூறினான்.

இதைக் கேட்டதும் டிபோரா கொதித்தெழுந்தாள்.

"நீ பைலின் கால் தூசிக்கு ஈடாக மாட்டாய்" என்று சொல்ல வேண்டும் போலிருந்தது டிபோராவுக்கு. எனினும், அவள் தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டாள்.

பைல், மூனியை உண்மையாகவே காதலித்தாள். ஆனால் மூனி அவளுடைய செல்வத்துக்காகத்தான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டான் என்பது பலருக்கும் தெரியும். கல்யாணம் செய்து கொண்ட பின்தான் பைல் மூனியின் மூர்க்கத்தனத்தையும் வஞ்சகத்தையும் தெரிந்து கொண்டாள். மூனியினால் அவளுடைய வாழ்க்கை நரக வேதனையாகிவிட்டது என்பது டிபோராவுக்குத் தெரிந்த கதைதான்.

மூனி கூறியதற்கு யாதொரு பதிலும் சொல்லாமல் டிபோரா அந்த இடத்தை விட்டு எழுந்து வேகமாக அப்பால் சென்றாள்.

யாருடனோ பேசிவிட்டு எதிரில் வந்த ஹாவர்ட் டிபோராவின் முகத்தைப் பார்த்ததும் கலங்கி விட்டான்.

"டிபோரா! உன் முகம் ஏன் இப்படியிருக்கிறது? மூனி உன்னிடம் அயோக்கியத்தனமாக ஏதாவது சொன்னானா?" என்று கேட்டான்.

"கிளப்புக்கு ஏன் வந்தோம் என்றிருக்கிறது. இங்குள்ள சூழ்நிலை என் மனத்தை என்னவோ செய்கிறது. கிளப்புக்கு நான் வருவது இதுதான் கடைசித் தடவை."

இவ்விதம் படபடப்பாகக் கூறிய டிபோராவின் கையைப் பிடித்துக் கொண்டான் ஹாவர்ட்.

"ஏன்? என்ன நடந்தது?" என்று கலக்கத்துடன் கேட்டான்.

"மூனி பைலின் செல்வத்தைச் சாப்பிட்டுக் கொண்டே அவளுக்குத் துரோகம் நினைக்கிறான். குடி மயக்கத்தில் லைலா பேகம் பேச்சுக்கள் என்னைத் திடுக்கிட வைக்கின்றன. இளம் பெண்கள் இப்படிக் குடித்துவிட்டு, குடி போதையில் கண்டபடி உளறுவது பயங்கரமான காட்சியாக இருக்கிறது. வாருங்கள், வீட்டுக்குத் திரும்பிப்போகலாம்."

"ஆமாம், அதுதான் நல்லது" என்று ஆமோதித்தான் ஹாவர்ட்.

ஹாவர்ட் அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டே சென்றான். தான் ஊருக்குத் திரும்பிச் செல்வது யாருக்கும் தெரியக் கூடாது என்பது அவனது எண்ணம். தோட்டத்துக்கு உலாவச் செல்வதாக அவன் நண்பர்கள் நினைத்துக் கொள்ள வேண்டும்



என்பதற்காக அவன் பரபரப்பு எதுவும் இல்லாமல் மெதுவாகச் செல்பவன் போல் பாசாங்கு செய்தான்.

ஷைலா தள்ளாடிக் கொண்டே அவர்களைப் பின் தொடர்ந்தாள்.

"இந்தப் பிசாசு நம்மை எதற்காகப் பின் தொடருகிறது? வேகமாக வாருங்கள்" என்று அவசரப்படுத்தினாள் டிபோரா.

"டிபோரா! ஏன் அவரை இப்படிக் கோபத்துடன் இழுக்கிறாய்?"

இவ்விதம் கேட்டுக் கொண்டே ஷைலா அருகில் வந்து விட்டதால், அவர்களுக்குச் சங்கடமாகியது.

"டிபோரா, என்னைக் கண்டு ஏன் முகத்தை அப்பால் திருப்பிக் கொள்கிறாய்? என்னை எல்லாருமே வெறுக்கிறார்கள். நான் அதிகமாகக் குடிப்பதுதான் அதற்குக் காரணம் என்று சிலர் கூறுகின்றனர். ஆனால், அதற்கு உண்மையான காரணம் வேறு. என் கணவன் என்னை வெறுக்கிறார் என்பதுதான் உண்மையான காரணம். என் விஷயத்தில் இரக்கம் காட்டுவதற்குப் பதிலாக எல்லோரும் என்னை அவமதிக்கிறார்கள்."

இவ்விதம் கூறிய ஷைலாவின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகத் தொடங்கியது. இந்தக் காட்சி முதல் தடவையாக ஷைலா விஷயத்தில் டிபோராவுக்கு இரக்கம் உண்டாகும்படி செய்தது.

ஷைலா மேலும் தொடர்ந்தாள்.

"டிபோரா! நீ இனிமேல் இந்தக் கிளப் பக்கமே வராதே. கிளப் வாழ்க்கைதான் பெல்லமியையும் என்னையும் இக் கதிக்குக் கொண்டு வந்து விட்டிருக்கிறது ...... அதோ நிற்கிறாள், பார். அவளைத் தெரியுமா? அவள் ஒரு சமயம் ஹாவர்டின் அருமைக் காதலியாக இருந்தாள். பிறகு இவர் அவளைக் கைவிட்டு விட்டார். ஆகையால், இந்த இடத்துக்கு வருவதில் எவ்வளவு ஆபத்து இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள். பிறகு உன் வாழ்க்கையும் என்னைப்போல் ஆகிவிடும்..."



"என்ன ஸார், இது? இப்போதுதான் இந்த வீட்டைக் கட்டினீர்! அதற்குள் வீட்டை விற்கப் போகிறீராமே, ஏன்?"

"இந்த வீட்டைக் கட்டிக் கொடுத்த இன்ஜினீருக்குப்பணம் கொடுக்கத்தான்!"

ஷைலா பேசி முடிப்பதற்குள் ஹாவர்ட் டிபோராவின் கையைப் பிடித்து இழுக்கத் தொடங்கினான்.

"அவள் உளறுவதை நம்பாதே. வா, போகலாம்" என்றான்.

'குற்றம் உள்ள நெஞ்சு குறுகுறுக்கிறது' என்பதை ஹாவர்டின் செய்கை நிதர்சனமாகக் காட்டியது.

ஷைலாவுக்கு நிற்க முடியவில்லை. எனவே, அவள் தள்ளாடிக் கொண்டே அருகில் இருந்த விளக்குக் கம்பத்தில் சாய்ந்து கொண்டாள்.

"ஹாவர்ட். டிபோரா நல்ல பெண். பெல்லமி என்னிடம் நடந்து கொள்வது போல் நீங்கள் அவளிடம் நடந்து கொள்ளாதீர்கள்" என்றாள்.

ஷைலா இவ்விதம் கூறி முடிப்பதற்குள் ஹாவர்ட் அங்கிருந்து டிபோராவை இழுத்துக்கொண்டு சென்று விட்டான்.

ஷைலாவின் வார்த்தைகள் டிபோராவுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. அவள் கண்களிலிருந்து நீர் வழியத் தொடங்கியது. ஆனந்தமாகச் சென்று கொண்டிருந்த தன் வாழ்க்கைப் படகு நடுக்கடலில் சுக்கல் சுக்கலாகத் தகர்ந்து விட்டது போல் அவளுக்குத் தோன்றியது.

டிபோரா கண்ணீர் வடிப்பதைக் கண்ட ஹாவர்ட் மிகவும் கலங்கிவிட்டான். ஷைலா கூறியதை மறைப்பதால் பலன் எதுவும் ஏற்படாது என்று அவனுக்குத் தோன்றியது. தன்னைத் துரோகி என்றும், பொய்யன் என்றும் அவள் நினைக்கும்படி விடுவதற்கு அவன் விரும்பவில்லை. மோட்டார் சென்று கொண்டிருந்தது. டிபோராவின் அழுகை அடங்குவதாகத் தோன்றவில்லை.

"டிபோரா, என்னை மன்னித்து விடு. உன்னிடம் நான் எதையும் ஒளிக்க விரும்பவில்லை. நான் அவளை ஒரு காலத்தில் காதலித்தேன் என்பது உண்மை தான். அது பல வருஷங்களுக்கு முன், அதாவது உன்னைப் பார்ப்பதற்கு முன் நடந்தது. உன்மீது எனக்கு உள்ள அன்போ, மதிப்போ எள்ளளவும் குறையவில்லை. என் ஆயுளில் இனி நான் கிளப்புக்குப் போவதில்லை என்று சபதம் செய்கிறேன். என்னை மன்னித்து விடு, மன்னித்து விடு."

இவ்விதம் துடி துடித்துப் போய் அலறிய ஹாவர்டின் தோளில் டிபோரா சாய்ந்து கொண்டாள். அவள் கொண்டிருந்த கர்வம் தவிடு பொடியாகியது. ஹாவர்டின் சிறு தவறு தன் மனத்தைப் படாதபாடு படுத்தும் போது, பெல்லமியின் அலட்சியத்தால் ஷைலாவை எவ்வளவு சகிக்க முடியாத வேதனைக்கு உள்ளாக்கும் என்பதை அவள் கற்பனை செய்து கொண்டாள். அவள் கண் முன் அடிக்கடி துர்ப்பாக்கிய சாலியான ஷைலாவின் சோக உருவம் தோன்றி மறைந்தது.

மோட்டாரில் இருந்த டிபோராவின் விம்மல் அடங்குவதற்கு வெகு நேரம் ஆயிற்று.

# சித்ராவின் சபதம்

ராமப்ரியா

மாடியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்த வேணு ஹாலில் ஏதோ பலமான வாக்குவாதம் நடப்பதும் அதில் தன் பெயர் அடிபடுவதும் காதில் விழவே, அப்படியே நின்று அதைக் காது கொடுத்துக் கேட்கலானான்.

"சித்ரா! தை மாதமோ பிறந்து விட்டது! முகூர்த்தம் வைக்க நாள் பார்க்க வேண்டுமென்று பேசிக்கொண்டால் கல்யாணத்திற்கு இப்போது என்ன அவசரம்! கொஞ்ச நாள் போகட்டும் என்கிறாயே! உனக்கு வேணுவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதில் இஷ்டமில்லையா! மனசை விட்டுச் சொல்லி விடேன்!" என்று கடிந்துகொண்டிருந்தாள் சங்கரி அம்மாள்.

சித்ரா ஒரு சோபாவில் குப்புறத் தலையை மடிமேல் கவிழ்த்துக் கொண்டு கைகளால் முகத்தைப் பொத்திக் கொண்டிருந்தாள். உடல் குலுங்குவதிலிருந்து அவள் விசித்து விசித்து அழுது கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றியது.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சித்ராவின் தகப்பனார் மகாதேவ சர்மா தம் பொறுமையை இழந்தவராய், "சங்கரி! குழந்தையை எதற்காக இப்படிக் கடிந்துகொள்கிறாய்!

இப்படித் தலையை நிமிர்த்து பார்!" என்று அன்புடன் கூறிச் சித்ராவின் தலையைத் தூக்கி நிமிர்த்தினர்.

தலையை நிமிர்த்தின சித்ரா, அது வரை அவள் விசித்து விசித்து அழுது கொண்டிருக்கிறாள் என்று எல்லோரும் நினைத்ததற்கு மாறாக, சிரிப்பை அடக்க முடியாமல் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தாள். சர்மா அவள் அப்படிச் சிரிப்பதைப் பார்த்துத் திகைத்து விட்டார். சங்கரி அம்மாளோ ரௌத்ராகாரமானாள். "அடக்கமில்லாமல் என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது! ஒரு வயது வந்த பெண்ணுக்கு இப்படி இடம் கொடுத்துக் கெடுப்பார்களா! குழந்தை அழுகிறாளென்று அப்பா மாய்ந்து போய்விட்டார். அப்பாவும் பெண்ணுமாக எப்படியாவது போங்கள்!" என்று மோவாயைத் தோள்பட்டையில் இடித்த வண்ணம் சமையலறையை நோக்கிச் சென்றாள்.

மகாதேவ சர்மா பெண்ணைத் தடவிக் கொடுத்த வண்ணம், "சித்ரா! நீ அழுகிறாயென்று நினைத்துப் பதறிப் போய்விட்டேன். உன் மனத்தைத் திறந்து சொல்லம்மா! அத்தான் வேணுவைக் கல்யாணம் செய்து கொள்ள இ

ஒன்றைப் படித்தவுடன் என் ஆவலை அடக்க முடியாமல் அத்தானையே கேட்ட எனக்குக் கதை எழுதச் சொல்லித்தர வேண்டுமென்று கேட்டேன். அத்தான் பெரிதாகச் சிரித்து விட்டு, 'நான் யாரிடமாவது இந்த வித்தையைக் கற்றுக் கொண்டாலல்லவா அதை உனக்குக் கற்றுக் கொடுப்பதற்கு! அதெல்லாம் பிறவிலேயே உண்டாகும் கலை. உனக்கெல்லாம் வரவே வராது' என்று பரிகாசமாகச் சொல்லிவிட்டார். அன்றைய தினத்திலிருந்து எப்படியாவது சிரமப்பட்டு ஒரு கதை எழுதி, அந்தக் கதையும் ஏதேனும் ஒரு பத்திரிகையில் பிரசுரம் ஆக வேண்டும். அதற்குப் பிறகுதான் கலியாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். அது முதல் சிறிய கதைகளிலிருந்து பெரிய கதைகள் வரை எழுதி, 'தேன்குழல்' என்னும் பாலர் பத்திரிகையிலிருந்து பிரபல பத்திரிகையான 'சூர்யகாந்தி' வரை அனுப்பியும் பார்க்கிறேன். சுவரில் எறிந்த பந்தைப் போல என் கதைகள் என்னிடமே திரும்பி வந்து சேர்கின்றனவே யொழியப் பிரசுரம் ஆவதில்லை. நான் கதை எழுதுவதோ அது திரும்பி வருவதோ ஒன்றுமே அத்தானுக்குத் தெரியாது.





பார்த்துக் கொண்டிருந்தான். சித்ராவுக்கு வேணுவின் மீது எவ்வளவு காதலோ அதற்கு அதிகமாக அவனுடைய கற்பனைக் கதைகளின் மீது அபார பிரியம். வேணு மாதிரி தானும் கதைகள் எழுத வேண்டுமென்று ஆசைப் பட்டாள் சித்ரா. அதை வாய்விட்டுவேணுவினிடம் கேட்டதற்குத்தான் அவளைக் கேலி செய்து அனுப்பி விட்டான் வேணு.

சித்ராவும், "நான் ஒரு கதையாவது எழுதுகிறேனா இல்லையா பாருங்கள், அத்தான்! என்னால் முடியாது என்று சொல்கிறீர்கள்! உங்கள் மாதிரி எழுதாவிட்டாலும் ஒரு கதையாவது எழுதின பிறகுதான் கலியாணத்தைப் பற்றி நினைக்கப் போகிறேன்" என்று வீம்பு பேசினாள். விளையாட்டுக்காகச் சித்ரா சொல்லி விட்டாள் என்று எண்ணிய வேணு பிறகு அதைப் பற்றியே நினைக்காமல் இருந்து விட்டான். ஆனால் இன்று சர்மாவிடம் சித்ரா பேசிக்கொண்டிருந்ததைத் தற்செயலாகக் கேட்ட வேணு சித்ராவின் வைராக்கியத்தைக் கேட்டு அப்படியே அசந்து போய் விட்டான். 'இதென்னடா வம்பாக இருக்கிறதே!' என்று கவலைப் பட்டான். சித்ராவுக்கு கட்டுப் போட்டாலும் ஒரு பத்திரிகையில் பிரசுரம் செய்யும் அளவுக்குக் கதை எழுதத் தெரியாது. வரவும் வராது என்பது வேணுவின் திடமான நம்பிக்கை. தன்னுடைய கதை ஒன்றாவது பத்திரிகையில் வந்தால்தான் கலியாணம் என்று தீர்மானமாகச் சொல்லி விட்டாள் சித்ரா. இதற்கு என்ன வழி செய்வது!

கீழே இருந்த சித்ராவுக்குத் தான் அப்பாவிடம் பேசியவைகளை அத்தான் கேட்டு விட்டாரோ என்று லேசாகச் சந்தேகம் எழுந்தது. வேணு என்ன செய்கிறான் என்று வேவு பார்க்கச் சித்ரா கொஞ்சம் கூடச் சப்தமே செய்யாமல் பூனைபோல் மாடிக்கு வந்தாள். வேணுவின் நாற்காலிக்குப் பின்னால் நின்று கொண்டு அவன் தன்னை மறந்த நிலையில் இருப்பதைப் பார்த்துச் சிரிப்பை அடக்கிக் கொண்டு அவன் என்ன செய்கிறான் என்று கவனித்துக் கொண்டிருந்தாள் சித்ரா.

அவனுக்கு அப்பொழுது திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. உடனே ஒரு வழி கண்டு பிடித்து விட்டோம் என்ற தன்னை மீறிய சந்தோஷத்தில் "ஆமாம்! அதுதான் சரி!" என்று வாய் விட்டுக் கத்தினான். நாற்காலிக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த சித்ரா அதற்கு மேலும் அடக்க முடியாமல் குபீரென்று கை தட்டிச் சிரித்தவாறு, "என்ன, அத்தான்! தானே பேசிக் கொள்கிறீர்களே!" என்று கேட்டாள்.

எதிர்பாராதவிதமாய்ச் சித்ராவைப் பார்த்தவுடன் வேணு திடுக்கிட்டு விட்டான். ஆனால் உடனே சாமர்த்தியமாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "என்ன, சித்ரா! ஏன் இப்படி சப்தம் செய்யாமல் வந்து நிற்கிறாய்! இப்படி வந்து உட்காரேன்! நீதான் என் அறைக்கு வரவே மாட்டேனென்கிறாய்!" என்று கொஞ்சிப் பேசிய வண்ணம் அவள் கைகளைப் பற்றினான். சித்ரா தன் கைகளை வெகு லாகவமாக அவனிட மிருந்து விடுவித்துக் கொண்டு, "போங்கள், அத்தான்!" என்று செல்லமாக அவனைக் கடிந்த வண்ணம், "அத்தான்! என்னமோ 'அதுதான் சரி' என்றீர்களே, அது என்ன!" என்று கேட்டாள்.

வேணுவுக்கு எதிரில் உள்ள நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு மேஜைமீது கைகளை ஊன்றிக் கொண்டு அவனைக் கூர்ந்து நோக்கினாள். பருவச் செழிப்புடன் பூரித்து விளங்கும் வெண்கலப் பதுமை போன்ற சித்ராவின் இன்முகம் வேணுவைக் கிறுகிறுக்கச் செய்தது. அவனுடைய மனம் சித்ராவின் அழகில் மயங்கி அவனை மெய் மறக்கச் செய்தது. தன்னுடைய ஆசைகளை யெல்லாம் ஒரு நீண்ட பெருமூச்சின் மூலம் வெளியிட்டவாறு, "ஒன்றுமில்லை, சித்ரா! ஒரு கதை எழுத நல்ல 'ஐடியா' தோன்றியது. அதைத்தான் வாய்விட்டுச் சொன்னேன்!" என்றான் வேணு.

"இந்த எழுத்தாளர்களே முழுப் பைத்தியமாக இருப்பார்கள் போல் இருக்கிறது" என்றாள் சித்ரா கேலியாக.

"நான் முழுப் பைத்தியம் என்றால் நீ அரைப் பைத்தியம்" என்றான் வேணு கண்களைச் சிமிட்டியவாறு. "எப்படியாம்!" என்று பொய்க் கோபத்துடன் வினவினாள் சித்ரா. "எழுத்தாளர் முழுப் பைத்தியம் என்றால் எழுத்தாளரின் மனைவி......!" என்று இழுத்தவாறு அவள் முகத்தையே நோக்கிய வண்ணம் கூறினான்.

"போங்கள், அத்தான்!" என்று சொல்லியவாறு வெட்கத்தை மேலிட்டவளாய் மான் போலத் துள்ளிக் கீழே ஓடி விட்டாள் சித்ரா. வேணு அவள் போகும் அழகையே கண் கொட்டாமல் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

வேணு அன்றைய சாயங்காலமே வேலைக்காரி முனியம்மாளுடன் தான் போட்ட திட்டப்படி ரகசியமாகப் பேசினான். இரண்டு நாட்களுக்குப் பிறகு முனியம்மா ஒரு கவரை ரகசியமாக வேணுவினிடம் கொடுத்தாள். வேணு மகிழ்ச்சியுடன் அந்தக் கவரை எடுத்துக்கொண்டு மாடியிலுள்ள தன் அறைக்குச் சென்று கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டான். பிறகு ஆவலோடு கவரைக் கிழித்து அதனுள்ளிருந்த கத்தைக் காகிதங்களையும் எடுத்துப் படிக்க ஆரம்பித்தான். கோர்வை என்பது துளிக்கூட இல்லாமல் கருத்து முன்னுக்குப் பின் முரணாகக் கதை ஒன்று எழுதியிருந்தாள் சித்ரா. உடனே வேணு மளமளவென்று சித்ரா எழுதிய கதையின் கருத்தையும், பெயர்களையும் வைத்துக் கொண்டு நடை, தலைப்பு எல்லாவற்றையும் மாற்றிச் சித்ராவின் பெயரில் அற்புதமாக ஒரு கதை எழுதி வேறு கவரில் போட்டு விலாசம் எழுதி ஒட்டினான். சித்ரா எழுதின கதையைச் சுக்குநூறாகக் கிழித்துவிட்டுப் புதுக் கவரைத் தபாலில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டுக் கிழித்த காகிதங்களையும் யாருக்கும் தெரியாமல் வெளியேகொண்டுபோய்ப் போட்டு விட்டுத் திரும்பினான். எவ்விதச் சலனமுமின்றிப் பதினைந்து நாட்கள் கழிந்தன.

அன்று முதல் தேதி. "சூர்ய காந்தி' மாதப் பத்திரிகை வெளிவரும் நாள். அதைத் தெரிந்து கொண்டிருந்த வேணு காலையில் வெகு சீக்கிரம் எழுந்து சைக்கிளில் அவசரமாக ஒருவருக்கும் தெரியாமல் கடைக்குச் சென்று "சூர்ய காந்தி"யைப் பார்த்தான். அதில் அவன் எதிர்பார்த்தபடியே 'சித்ரா'வின் கதை வந்திருந்தது. அதைப் பார்த்து விட்டு வேணு மகிழ்ச்சியுடன் வீடு திரும்பி ஒன்றுமே தெரியாதவன் போல் ஹாலில் போய் உட்கார்ந்து கொண்டான்.

தினசரி காலையில் ஹாலில் எல்லோருமாகச் சேர்ந்து உட்கார்ந்து சந்தோஷமாக அரட்டை அடித்துக்கொண்டு காப்பி சாப்பிடுவது சர்மா வீட்டவர்களின் வழக்கம். அன்றும் வழக்கம் போல் சர்மா, சங்கரியம்மாள், சித்ரா, வேணு நால்வரும் பேசிக் களித்துக் கொண்டே காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது பேப்பர்காரன் ஐந்தாறு பத்திரிகைகளை ஹாலுக்கு வெளியே வைத்து விட்டுச் சென்றான். சித்ரா பரபரப்புடன் எழுந்து சென்று அந்தப் பத்திரிகைகளையும் எடுத்து வந்தாள்.

வேணு உடனே சர்மாவைப் பார்த்து, "மாமா! சென்னையில் எத்தனை பத்திரிகைகள் வெளி வருகின்றன என்று தெரிய வேண்டுமானால் நம் சித்ராவைக் கேட்டால் போதும் ஒன்று விடாமல் அத்தனை பத்திரிகைகளையும் எதற்காகத்தான் வாங்குகிறாளோ, தெரியவில்லை!" என்று பரிகாசம்

அவன் பார்க்கவே இல்லை. அந்தச் சஞ்சிகை சித்ராவின் மடிமேலேயே கிடந்தது. தன் பொறுமையை இழந்த வேணு, "சித்ரா! எல்லாவற்றையும் மடிமேலேயே வைத்துக் கொண்டிருக்கிறாயே! அந்த 'சூர்ய காந்தி' பத்திரிகையை என்னிடம் சற்று கொடேன், பார்ப்போம்!" என்றான்.

சித்ராவும் அதை எடுத்து வேணுவினிடம் கொடுத்தாள். "சூர்யகாந்தி வாஸ்தவமாகவே பிரபல பத்திரிகை என்பதில் சந்தேகம் இல்லை. அதில் வரும் கதைகள் எப்பொழுதுமே ரொம்ப உயர்தரமாக இருக்கும்!" என்று புரட்டியவாறு சொல்லிக் கொண்டே சித்ராவைக் கடைக் கண்ணால் பார்த்தான். "ஏன்! நீங்கள் எழுதிய கதை வந்திருக்கிறதாக்கும்! அதற்காகத்தான் அப்படிப் புகழுகிறீர்களோ!" என்று குறும்புச் சிரிப்புடன் கேட்டாள் சித்ரா.

"அதொன்றுமில்லை! இந்த மாதம் எனக்கு ஆபீஸில் வேலை அதிகமானதால் நான் ஒன்றுமே எழுதவில்லை. பிரபலமான எழுத்தாளர்கள் எல்லாரும் சூர்ய காந்தியில்தான் எழுதுகிறார்கள்!" என்றான் மறுபடியும் வேணு.

"சூர்யகாந்தியைக் கொடுங்கள், பார்ப்போம். பார்த்து விட்டுத் தருகிறேன்" என்றாள் சித்ரா.

"இரு! நான் முழுவதும் பார்த்து விட்டுத் தருகிறேன்" என்று கொஞ்சம் பிகு பண்ணிக் கொண்டான் வேணு. சித்ரா வேணுவின் கையிலிருந்த பத்திரிகையை

கடித்துக் கொண்டான். சித்ரா அதில் ஒரு கதையை வாசிக்க ஆரம்பித்தாள். முடிக்கும் வரை வாயைத் திறக்கவே இல்லை. கடைசியில் நிதானமாக, "அப்பா! நான் ஒரு கதை எழுதியிருந்தேன். அது சூர்யகாந்தியில் பிரசுரமாகியிருக்கிறது" என்றாள். சர்மா இதைக் கேட்டவுடன் துள்ளி எழுந்தார் மகிழ்ச்சியோடு.

"நீயும் வேணுவைப் போல் கதை எழுதுகிறாயா, என்ன!" என்று கன்னத்தில் கையை வைத்து அப்படியே நின்று விட்டாள் சங்கரி அம்மாள்.

"இதென்ன அதிசயம்! நீயும் கதை எழுதுகிறாயா, என்ன! அது எத்தனை நாளாக! எங்கே, இங்கே கொடு, பார்ப்போம்!" என்று ஒன்றுமே தெரியாதவனைப் போல் அபிநயித்தான் வேணு.

மத்தியானம் சாப்பாடெல்லாம் ஆயிற்று. சூர்யகாந்தி இதழுடன் மாடிக்குப் போனான் வேணு. சிறிது நேரத்துக்கெல்லாம் அதே புஸ்தகத்தை வாங்குபவள் போன்று சித்ராவும் மாடிக்குப் போனாள். சித்ராவைக் கண்டவுடன், "சித்ரா! உன் கதை முதல்தரமாக இருக்கிறது. இவ்வளவு நன்றாக எழுதுவாய் என்று நான் நினைக்கவே இல்லை" என்றான் வேணு.

"அத்தான்! நீங்கள் அடிக்கடி பத்திரிகைகளுக்குக் கதைகளை அனுப்புகிறீர்களே! நீங்கள் எழுதும் கதைகளுக்குத் தலைப்பை எப்பொழுதாவது பத்திரிகைக் காரியாலயத்தில் மாற்றியிருக்கிறார்களா!" என்று கேட்டாள் சித்ரா.

"ஓ! அவர்களுக்கு அந்தத் தலைப்பு பிடிக்கவில்லை

"இதென்ன அதிசயம்! நீயும் கதை எழுதுகிறாயா, என்ன! அது எத்தனை நாளாக! எங்கே, இங்கே கொடு, பார்ப்போம்!" என்று ஒன்றுமே தெரியாதவனைப் போல் அபிநயித்தான் வேணு.

மத்தியானம் சாப்பாடெல்லாம் ஆயிற்று. சூர்யகாந்தி இதழுடன் மாடிக்குப் போனான் வேணு. சிறிது நேரத்துக்கெல்லாம் அதே புஸ்தகத்தை வாங்குபவள் போன்று சித்ராவும் மாடிக்குப் போனாள். சித்ராவைக் கண்டவுடன், "சித்ரா! உன் கதை முதல்தரமாக இருக்கிறது. இவ்வளவு நன்றாக எழுதுவாய் என்று நான் நினைக்கவே இல்லை" என்றான் வேணு.

"அத்தான்! நீங்கள் அடிக்கடி பத்திரிகைகளுக்குக் கதைகளை அனுப்புகிறீர்களே! நீங்கள் எழுதும் கதைகளுக்குத் தலைப்பை எப்பொழுதாவது பத்திரிகைக் காரியாலயத்தில் மாற்றியிருக்கிறார்களா!" என்று கேட்டாள் சித்ரா.

"ஓ! அவர்களுக்கு அந்தத் தலைப்பு பிடிக்கவில்லை
என்றால் கட்டாயம் மாற்றி விடுவார்கள். சில சமயத்தில் நாம் எழுதும் பெயர்களை மட்டும் வைத்துக் கொண்டு கதையின் அமைப்பையே கூட மாற்றி விடுவார்கள்" என்றான் வேணு வெகு உற்சாகத்தோடு.

"ஓகோ, அப்படியா! அதுதான் உங்களைக் கேட்டேன். ஏனென்றால் இதுதான் நான் முதல்



தடவையாக கதை எழுதுவதால் அந்த சம்பிரதாயங்களெல்லாம் எனக்குத் தெரியவில்லை. ஏன், அத்தான்! நாம் ஒரு பத்திரிகைக்குக் கதை அனுப்பினோமென்றால் அந்தக் காரியாலயத்தார் வேறொரு பத்திரிகை ஆபீஸிற்கு அனுப்பிக் கூடப் பிரசுரம் செய்யச் சொல்வார்களோ!" என்று ஒன்றுமே தெரியாதது போலக் கேட்டாள் சித்ரா.

வேணுவுக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது. ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது. அதனால் தான் சித்ரா தன்னை இப்படி மடக்கி மடக்கிக் கேள்விகள் கேட்கிறாள் என்பதைச் சட்டென்று உணர்ந்து கொண்டான்.

"அத்தான்! நான் கொஞ்ச நாட்களாகவே கதைகள் எழுதியனுப்புகிறேன். நான் புதிதாக எழுதுவதால் ரொம்பவும் பிரபலமாயுள்ள பத்திரிகைகளுக்கு அனுப்புவதில்லை. இந்தத் தடவை நான் என் கதையை, 'மஞ்சள்' என்னும் பெண்களுக்கான பத்திரிகைக்குத்தான் அனுப்பினேன். அது என்னடா வென்றால் நான் கொஞ்சம் கூட எதிர்பாராதவிதமாக 'சூர்யகாந்தி'யில் வந்திருக்கிறது" என்றாள் சித்ரா.

"சித்ரா! நான் ஒரு விஷயம் சொல்லப் போகிறேன். ஒருவரிடமும் சொல்லாதிருப்பாயா!" என்று கெஞ்சிய வண்ணம் கேட்டான் வேணு. சித்ரா ஆச்சரியத்தோடு அவனையே பார்த்த வண்ணம் சரியென்பது போலத் தலையை ஆட்டினாள். "நீ அன்று மா

கேள்விகள் கேட்கிறாள் என்பதைச் சட்டென்று உணர்ந்து கொண்டான்.

"அத்தான்! நான் கொஞ்ச நாட்களாகவே கதைகள் எழுதியனுப்புகிறேன். நான் புதிதாக எழுதுவதால் ரொம்பவும் பிரபலமாயுள்ள பத்திரிகைகளுக்கு அனுப்புவதில்லை. இந்தத் தடவை நான் என் கதையை, 'மஞ்சள்' என்னும் பெண்களுக்கான பத்திரிகைக்குத்தான் அனுப்பினேன். அது என்னடா வென்றால் நான் கொஞ்சம் கூட எதிர்பாராதவிதமாக 'சூர்யகாந்தி'யில் வந்திருக்கிறது" என்றாள் சித்ரா.

"சித்ரா! நான் ஒரு விஷயம் சொல்லப் போகிறேன். ஒருவரிடமும் சொல்லாதிருப்பாயா!" என்று கெஞ்சிய வண்ணம் கேட்டான் வேணு. சித்ரா ஆச்சரியத்தோடு அவனையே பார்த்த வண்ணம் சரியென்பது போலத் தலையை ஆட்டினாள்.
"நீ அன்று மாமாவிடம் உன் சபதத்தைச் சொல்லிக் கொண்டிருந்த போது தற்செயலாக நான் எல்லாவற்றையும் கேட்க நேரிட்டது. உன் மேல் எனக்கிருக்கும் அன்பு சொல்லி முடியாது. நீ இப்படியே எழுதிக் கொண்டிருந்தால் உன் சபதம் இந்த ஜன்மத்தில் நிறைவேறாது என்று எண்ணி நீ எழுதிய கதையைத் திருத்தி எழுதி அனுப்பி விட்டேன். ஆனால் முட்டாள்தனமாக நீ எந்தப் பத்திரிகைக்கு அனுப்பியிருக்கிறாயென்பதை மட்டும் நான் பார்க்கவில்லை. நான் வழக்கமாக அனுப்புவது சூர்யகாந்தி பத்திரிகையாதலால் நீயும் அதற்குத்தான் அனுப்பியிருப்பாய் என்று நினைத்து அதற்கு அனுப்பி வைத்தேன். அதனால் தான்......!" என்றான் வேணு.

சித்ராவின் மனம் அத்தானின் அன்பு தோய்ந்த வார்த்தைகளைக் கேட்டதும் நெகிழ்ந்து பாகாய் உருகியது. "ஏன், அத்தான்! உங்களுக்கு என்னிடம் ஏன் இவ்வளவு பிரியம்? எதற்காக இத்தனை சிரமமெடுத்துக் கொண்டு செய்திருக்கிறீர்கள்!" என்றாள். அவளுக்கு ஆனந்தம் தலைகொள்ளவில்லை. உடனே குடு குடுவென்று கீழே ஓடினாள்.

"சித்ரா, மெதுவாகப் போ! ஓடாதே!" என்று



*Best in France best everywhere*

# PEARLINE
# FRENCH
# *LAVENDER*
# BRILLIANTINE

Available everywhere.

**PEARLINE-PARIS LTD.** P. O. Box 493, Bombay.

பிரதி சனிக்கிழமை இரவுகளில் 8-30 மணிக்கு ரேடியோ சிலோனில் 25-5, 41-72 மீட்டர்களில் எமது "டபிள் ஆர் குவிட்ஸ்" நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

---

## மிகவும் குறைந்த விலை !

வாட்டர் புரூப், ஷாக் புரூப் ஒவ்வொன்றும் 10 ஆண்டு உத்திரவாதம் எந்த மாடலுக்கும் ஒரே விலை.




## " குரங்கு மார்க்கு "

கறுப்பு பற்பொடி

சகல பல் நோய்களுக்கும் சிறந்தது

**MONKEY BRAND**

**BLACK TOOTH POWDER**





# தகுதியற்றவன்

கௌரி

அப்போதுதான் வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்த விஜயா, வாசற் கதவு திறந்திருந்ததைக் கண்டதும் திடுக்கிட்டாள். அச்சத்தால் அவளது முகம் வெளிறிப் போயிற்று. சுவாமிநாதன் அவ்வளவு சீக்கிரம் ஒருநாளும் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியதில்லை. எதிர்பாராத விதமாக அன்று அவன் திரும்பவும், அச்சமயம் தான் வீட்டில் இல்லாமற் போகவும் நேர்ந்து விடவே, என்ன ஆகுமோ என்று பயந்து போய் விஜயா நடுநடுங்கிக் கொண்டே வீட்டிற்குள் கைக்குழந்தையுடன் நுழைந்தாள்.

கையில் மருந்துப் புட்டியுடன் குழந்தையைத் தாங்கியவாறு நுழை

கொண்டு இங்கு கால் நடையாக வந்து கஷ்டப்பட வேண்டாம். நான் அவரை உங்கள் வீட்டிற்கே வரச்சொல்லி விடுகிறேன்' என்று அன்பு ததும்பக் கூறினான். டாக்டர் வெளியிலிருந்து வந்ததுதான் தாமதம்! முதலில் நம் குழந்தையைப் பார்க்கச் சொல்லிவிட்டு என்னை அனுப்பினான். மனுஷர்கள் என்றால் இப்படியல்லவா இருக்கவேண்டும்? நீங்கள் இத்தனை நாள் இந்த நல்ல மனிதர்களைப் பற்றி வீணாகத் தப்பான கற்பனைகள் செய்து கொண்டு காலத்தைப் போக்கினீர்களே!'' என்று விஜயா ஒரு குட்டிப் பிரசங்கம் செய்து விட்டு, 'இந்தமட்டும் புருஷனுக்கு இஷ்டமில்லாத காரியத்தைச் செய்துவிட்டு வசவு வாங்காமல் தப்பினோமே! தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்தான்' என்ற மகிழ்ச்சியில் தன் வேலையைக் கவனிக்கச் சமையலறைக்குச் சென்று விட்டாள்.

விஜயா சென்றதும் சுவாமிநாதனின் உள்ளம் கடந்த கால சம்பவங்களைப் பற்றிய சிந்தனையில் லயித்தது.

சுவாமிநாதனின் தகப்பனார் தஞ்சையில் ஒரு செல்வாக்கு மிகுந்த பிரபல வியாபாரி. தந்தையின் ஒரே செல்வக் குழந்தையான

முன்னுக்குக் கொண்டு வரப் பிரயத்தனப் பட்டார். ரகுவும் நன்றாக வாசித்து வந்தான்.

சுவாமிநாதனும் ரகுவும் ஒரே வகுப்பில் வாசித்து வந்ததால் இருவருக்கும் நட்பு ஏற்பட்டது. சுவாமிநாதனும் படிப்பில் கெட்டிக்காரனாயிருந்தான். ஆனால் ரகுவைப் போன்ற விசாலமான அறிவு சுவாமிநாதனுக்கு இல்லாததால் அவனுக்கு அடிக்கடி சகாயம் செய்து உதவினான். தன்பால் ரகு கொண்ட அக்கறையைக் கண்டு சுவாமிநாதனும் அவனை உள்ளன்புடன் நேசித்தான். இளவயதில் ஏற்பட்ட இந்த நட்பு, வயது ஏற ஏற வளர்ந்து கொண்டே போயிற்று. இவர்களது அத்தியந்த நட்பைக் கண்டு ஊரே அதிசயத்தது.

பள்ளிப் படிப்பு முடிவுற்றதும் இரு நண்பர்களும் தம் கிராமத்தை விட்டுப் பட்டணம் சென்றனர். பள்ளியில் முதன்மையாகத் தேறியதால் ரகுவுக்கு உபகாரச் சம்பளம் அளிக்கப் பட்டது. ஆகவே, ரகு கலாசாலையில் சேர்ந்து படிக்க விரும்பினான். சுவாமிநாதனும் அவனுடனும் அதே கல்லூரியில் அதே வகுப்பில் சேர்ந்து கொண்டான்.

இரண்டு வருடங்கள் கலாசாலையில் ஒருயிர் ஈருடலாயிருந்து வந்த இந்த நண்பர்

னான். ஆதலால் ரகுநாதன், சுவாமிநாதன் போன்ற அறிவிற் சிறந்த மாணவர்களுடன் அவள் சரளமாகப் பேசிப் பழகலானாள்.

சுசிலாவின் லாவண்யமும், விசால அறிவும் ரகுநாதன் சுவாமிநாதன் இருவரையும் வசீகரித்தன. சுசிலாவோ ரகுவின் விசால அறிவைக் கண்டு பிரமித்துப் போனாள். முதலில் இரு மாணவர்களிடமும் சமமாகப் பழகிய சுசிலா, நாட்கள் செல்லச் செல்ல ரகுவின் அறிவின் ஆழத்தை உணர்ந்து அவனிடம் அதிகமாகத் தன் சர்ச்சைகளைச் செய்யலானாள். இதைக் கண்ட சுவாமிநாதனுக்கு ரகுவினிடம் இலேசாக வெறுப்புத் தட்டத் தொடங்கியது. ஆயினும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் அவன் ரகுவிடம் முன்போலவே பழகி வந்தான். அதற்குக் காரணம்? தகுந்த காரணமிருந்தது. சுசிலா ஒரு ஏழை வீட்டுப் பெண். படித்து வேலை செய்து குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலையில் இருப்பவள் என்று சுவாமிநாதன் அறிந்திருந்தான். 'தனது பெரும் செல்வத்திற்கு முன்னால் ரகு எப்படிப் போட்டியிட முடியும்? பெண்களுக்கே நகை, புடவை இவைகளில் விருப்பம் அதிகம். சுசிலா அதற்கு எப்படி விதி விலக்காக இருப்பாள்?

ஆகிவிட்டது. சுவாமிநாதனும் படிப்பில்

பொறாமையும் குரோதமும் சுவாமிநாதனின் அறிவை மறைத்து அவனது உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டன. துவேஷம் அவன் உள்ளத்தில் எழுந்து அவனது உயர்ந்த குணங்களையும் சிதறிப் போகச் செய்தது. சுசீலாவையும், சிறு பிராயத்திலிருந்து கல்வித் துறையில் தனக்கு வழிகாட்டி உதவி வந்த அருமை நண்பனான ரகுவையும் பழி வாங்கச் சுவாமிநாதன் துடிக்கலானான்.

அந்த வருடம் படிப்பு முடிந்து பட்டம் பெற்றதும் சுசீலா ரகுவை மணந்து கொண்டாள். பொறாமைத் தீயால் பற்றி எரிந்து கொண்டிருந்த சுவாமிநாதன் அவர்களது விவாகத்திற்குப் போகவில்லை. தனது அசுரத்தனமான செயலில் அவன் ஈடுபடலானான்.

தனது தகப்பனாரின் செல்வாக்கால் ரகுவிற்கு வேலை கிடைக்காமல் இருப்பதற்கான பல முயற்சிகளில் ஈடுபட்டான். எனவே, வேலைக்கு மனுப்போட்ட இடங்களிலெல்லாம் ரகுவிற்கு வேலை கிடைக்கவில்லை.

ரகுவின் பரிதாப நிலையைக் கண்டு சுசீலாவும் கலங்கினாள். தனது அன்பு மொழிகளினால் அவள் அவனுக்கு ஆறுதல் கூறித் தேற்றி வந்தாள். பல மாதங்கள் வேலை கிட்டாமல் அலைந்து சலித்துப் போன போது

பாற்றவும் சுசீலா பல இடங்களில் டியூஷன் சொல்லிக் கொடுத்துச் சம்பாதிக்கலானாள்.

காலச் சக்கரம் சுழன்று கொண்டேதான் இருக்கிறது. அது சுழலும் பாதை எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லை. கரடுமுரடாக இருப்பினும் பசுமையாகவும் இருக்கத்தான் செய்கிறது. ரகுவின் வாழ்வுப் பாதையில் அதுவரையில் கரடு முரடுகளையே நோக்கிச் சென்று கொண்டிருந்த காலச் சக்கரம் அவற்றை விட்டுத் திரும்பத் தொடங்கியது. அவனது வாழ்வில் அதிர்ஷ்ட தேவதை புகலானாள். வைத்தியக் கல்லூரியில் முதல் வகுப்பில் தேறிய ரகுவிற்குச் சர்க்கார் ஆஸ்பத்திரியில் உயர்தர உத்தியோகம் கிடைத்தது. நல்ல கைராசிக்காரன் என்ற பெயரும் நல்ல குணமும் இருந்ததால் ரகுவிடம் நோயாளிகள் அதிகம் வரலாயினர். ஆகவே, அவனது வருமானம் பெருகி லக்ஷ்மியின் அருள் நிறைந்து அவனது இல்லம் விளங்கியது. அன்பான மனைவி, செல்வம், செல்வாக்கு ஆகியவை பெற்றுப் பரோபகாரி என்று ஊரார் புகழ விளங்கினான்.

எந்தக் காலச் சக்கரம் ரகுவின் வாழ்விலே இன்பத்தைப் புகுத்தியதோ, அதே சக்கரத்தின் சுழலில் சிக்குண்டு



# உங்கள் ஸ்னாப்ஷாட்டுகளுக்கு உகந்த பிலிம் தேர்ந்தெடுப்பது எப்படி



மங்கலான வெளிச்சம் அல்லது துரிதமான செயல் படங்களுக்கு: 'கோடக்' சூப்பர்-XX தான் உகந்த பிலிம்— ஏனெனில் அது மிக துரிதமானது. தவிர எல்லா நிறங்களையும் கிரகிப்பது. செயற்கை வெளிச்சத்தில் படம் பிடிக்க பெரும்பாலான அமெச்சூர்கள் உலகிலுள்ள வேறெந்த பிலிமையும் விட இதையே அதிகமாக தேர்ந்தெடுக்கின்றனர்.



**சூப்பர்-XX**



சிறந்த பிரிண்டுகள் மற்றும் பெரிய என்லார்ஜ்மெண்டுகளுக்கு: 'கோடக்' ப்ளஸ்-X பிலிம் ஏற்றது. ஏறக்குறைய 'சூப்பர்-XX' பிலிமிற்குச் சமமான வேகமிருப்பதுடன், நிறபேதங்களை அப்பட்டமாக பிரிபடுத்தக்கூடிய இந்த பிலிம் தரும் நெகடிவ்களில் மிக நுண்ணியமான விவரச் சேர்க்கையும் சமமான ஒளி, நிழல்ப்பதிவும் பெரிதளவில் காணப்படும்.



**ப்ளஸ்-X**



வெளியில் சாதாரண படங்கள் எடுக்க: 'கோடக்' வெரிக்ரோம் பிலிமை கேட்டு வாங்குங்கள். அபார எக்ஸ்போஷர் வசதியுடையதாதலால், பலவிதமான வெளிச்ச நிலைமைகளிலும் சிறப்பான படங்கள் எடுக்க அது உதவுகிறது. தவிர ஒரே நிலையான லென்ஸ் மற்றும் ஷட்டர் வேகமுடைய எளி

# அதிகப்படி தென்பு



நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



தென்புடன் விளங்குக...... உங்கள் தினசரி போஜனத்துடன் வாட்டர்பரீஸ் காமபவுண்ட் சாப்பிட்டு வருக...... அது சுருசுருப்பூட்டுவதும் ருசிமிகுந்ததுமான ஒரு டானிக். அதிகப்படி தென்பை வளர்க்க உதவுவதில் நிச்சய குணமுள்ளது. வாட்டர்பரீஸ் காம்பவுண்டு உங்களுக்கு அத்யாவசியமான புஷ்டிபதார்த்தங்களை வழங்கி, உங்களுக்கு சோர்வு, ஜலதோஷம், இருமல், எதுவும் ஏற்படாத வாறு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும். வயது வந்தவர், இளைஞர் யாவருக்கும் தேக வலிமை பெற இன்றியமையாதது.



**WATERBURY'S**

**COMPOUND**

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

உங்களை தென்புடன் வைத்திருக்கும்

NAS 744

வப் புகழ்ந்த டாக்டரையும் அவரது மனைவியையும் காரில் உல்லாசமாகச் சென்றுகொண்டிருந்த போது சுவாமிநாதன் பார்த்தான். அவர்களை இன்னார் என அறிந்து கொண்டான். தகப்பனார் இறந்து, தான் நிராதரவாக இந்த உலகில் விடப்பட்ட பின் வேலைக்காக அலைந்து தவித்தபோதே சுவாமிநாதன் ரகுவுக்குத் தான் இழைத்த தீமைகளை எண்ணி உள்ளம் துடித்தான். அன்று அதே ரகுவையும் சுசீலாவையும் பார்த்த பொழுது அவனுடைய மனோவேதனை பன்மடங்கு அதிகரித்தது.

தனது அசரத்தனமான செய்கைகளுக்காகச் சுவாமியின் உள்ளம் தவித்தது. ரகுவும் சுசீலாவும் உத்தம குணம் படைத்தவர்கள். ஆதலால் கடவுள் அவர்களை உயர்த்தி வைத்தார். தான் செய்த தீவினையே தன்னை இக்கீழ் நிலைக்குக் கொண்டு வந்துள்ளது. 'முற்பகல் செய்வன பிற்பகல் விளையும்' 'வினை விதைத்தவன் வினை யறுப்பான்.' ஆகா! இம்மொழிகள் என் விஷயத்தில் எவ்வளவு உண்மையாயின! குணவானை ரகுவிற்கு வேலை கிடைக்காமல் செய்த பாபம் அல்லவா என்னை இந்த நிலைக்குக் கொண்டு வைத்தது!

இவ்வாறு எண்ணி எண்ணி வெதும்பிய சுவாமிநாதனுக்கு ரகுவிடம் போய் மன்னிப்பு கோர வேண்டும் என்று ஆதுரம் ஏற்பட்டது. ஆனால் சுய கௌரவம் நடு நடுவே தலை தூக்கி அதற்கு இடங் கொடாமல் அவனைத் தடுத்து நிறுத்தியது.

கடந்த ஒரு வாரமாக அவனது குழந்தை ஜுர வேகத்தால் தவித்தபோது சுவாமிநாதனின் பாடு தர்ம சங்கடமாவிட்டது. அவனிருந்த கிராமத்தில் மாற்றலாகி வந்த டாக்டர் ரகுவைத் தவிர வேறு யாருமில்லாததால் அவன் குழந்தைக்கு வைத்தியம் செய்ய முடியவில்லை. பன்முறை அவனிடம் கேட்ட விஜயாவை அடக்கும் வழியறியாத சுவாமிநாதன் தன் மனைவியிடம், தான் ரகுவிடம் போக இசையாத உண்மைக் காரணத்தைச் சொல்ல விரும்பாமல், "டாக்டர் பெரிய படிப்புப் படித்தவர். ஆதலால் ஒரு வேளை கர்வமுடையவராக யிருப்பார். பழைய டாக்டராக யிருந்தால் போயிருப்பேன். புதியவராகயிருப்பதால் போக சங்கோசமாக யிருக்கிறது. எப்படி யிருப்பாரோ, என்னவோ?" என்று கூறி மழுப்பி வைத்தான்.

பன்முறை கேட்டும் பயனில்லாததைக் கண்ட விஜயா, குழந்தையின் நிலையைக் கண்டு அஞ்சி, 'வந்தது வரட்டும்' என்று துணிவுடன் சுவாமிநாதன் இல்லாத வேளையில் டாக்டரிடம் சென்று விட்டாள்.

* * *

**பா**ம்! பாம்! பாம்! ...... தனது வீட்டிற்குச் சமீபத்தில் ஒலித்த மோட்டார் ஹாரனைக் கேட்டுச் சிந்தனை யுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த சுவாமிநாதனின் மனம் இவ்வுலகிற்குத் திரும்பியது. பரபரப்புடன் விஜயா அவனிடம் ஓடி வந்து, "டாக்டரும் அவரது மனைவியும் காரில் நம் வீட்டிற்கு வந்திருக்கிறார்கள். வாருங்கள். எதிர்கொண்டு வரவேற்போம்!" என்று கூறியவாறு சுவாமிநாதனை அழைத்தாள்.

சுவாமிநாதனைக் கண்டதுதான் தாமதம்! "சுவாமி!" என்று அன்புடன் கூறியவாறு ரகு ஓடோடியும் வந்து தன் பழைய நண்பனை இறுக அணைத்துக் கொண்டான். சுவாமிநாதன் அருகில் நின்றுகொண்டிருந்த அவனது சின்னஞ் சிறு குழந்தையைச் சுசீலா அன்புடன் தூக்கிக் கொஞ்சலானாள். டாக்டர் ஏற்கனவே தன் புருஷனுக்கு அறிமுகமானவர் என்பதைத் தெரிந்துகொண்ட விஜயாவின் பேதை உள்ளம் பூரித்து நின்றது.

பிரிந்த நண்பர்கள் வெகு நேரம் பேசிய பின்னர் விடை பெற்றுக் கொண்டனர்.

ரகுவும் சுசீலாவும் சென்றபின், சுவாமிநாதன் விஜயாவைப் பார்த்து, "விஜயா! ரகு மூலம் நம் தரித்திர வாழ்வுக்கு முடிவு வந்து விட்டது. இதுவரையில் ரகு என் வாழ்க்கையில் எனக்கு மட்டும் உதவினான். இன்று எனக்காக என் குடும்பத்தையே உயர்த்திவைக்க முன்வந்திருக்கிறான். விஜயா! அன்று கல்வித் துறையில் உதவி வழி காட்டிய ரகு இன்று 'வாழ்வு'த் துறையிலும் வழிகாட்டியாக இருக்கிறான்!" என்று சொன்ன போது உணர்ச்சிப் பெருக்கால் அவன் கண்களில் நீர் சுரந்தது.

'உண்மை நண்பர் என்றால் அப்படித்தான் இருப்பார். அவரது பெருந்தன்மைக் கேற்ற மனைவியை அவர் அடைந்திருப்பது விசேஷம் அல்லவா? அவளால் அல்லவா அவர் நம் வீடு வந்து உங்களைத் தன் நண்பர் என அறிந்துகொண்டு உதவுகிறார்? ஏழைமையைக் கண்டு இரங்கி எனக்கு உதவ வந்த பெருந்தன்மையுள்ள மனைவியை அடையத் தகுந்தவர் அல்லவா அவர்?" என்றாள் விஜயா.

"அதிலென்ன சந்தேகம், விஜயா?" என்று பதில் கூறிய சுவாமிநாதன் மனத்துள், "சுசீலா! உன் உயர்ந்த குணத்திற்கு ஏற்றவன் ரகுதான். நான் முற்றிலும் தகுதியற்றவன்!" என்று கூறிப் பெருமூச் செறிந்தான்.



"உங்களுக்கு மயக்கம் எப்பொழுது வருகிறது? அடிக்கடி வருகிறதா?"

"இல்லை, டாக்டர் ஸார்! உங்கள் 'பில்லை'ப் பார்க்கும் போதுதான் வருகிறது!"

அமெரிக்காவின் மூன்றாவது ஜனாதிபதியான தாமஸ் ஜெப்பர்சன் காலத்தில்தான் அவரது மேற்பார்வையில், ஜனாதிபதியின் ஜாகை வெகு அழகாக நிர்மாணிக்கப்பட்டுப் பூர்த்தியாயிற்று.

1812-14ல் அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் நடந்த போரில் பிரிட்டிஷார் அமெரிக்க ஜனாதிபதியின் ஜாகையான வெள்ளை மாளிகையின் பெரும் பகுதியையும் இடித்துத் தகர்த்து விட்டார்கள். கானடாவில் இப்போது டொரொன்டோ என்று வழங்கப்படும் யார்க் நகரை அமெரிக்கர்கள் அழித்ததற்குப் பிரதியாகவே தாங்கள் வெள்ளை மாளிகையைத் தகர்த்ததாகப் பிரிட்டிஷார் கூறினர். எனினும் மூன்று நாலு வருஷங்களில் அமெரிக்கர்கள், அழிந்த



ஏழு அறைகளும் இருபத்தொரு படுக்கை அறைகளும் இருக்கின்றன. அவற்றைத் தவிர நாற்பது தாழ்வறைகளும், பத்தொன்பது ஸ்நான அறைகளும் இருக்கின்றன.

1941-42ல் இரண்டாவது மகா யுத்தம் நடந்துகொண்டிருந்ததால், ஜனாதிபதியின் அலுவல்கள் அதிகமாகி விட்டது. அப்போது மேற்படி மாளிகையின் கிழக்குப் பகுதி விருந்தாளிகளை வரவேற்பதற்கு வசதியாக மேற்கொண்டு விஸ்தரிக்கப் பட்டது.

அமெரிக்காவின் பதினாறாவது ஜனாதிபதியான ஆப்ரகாம் லிங்கன் 1861லிருந்து 1865ம் வருஷம் வரையில் பதவி வகித்து வந்தார். அக்காலத்தில் யார் வேண்டுமாயினும், வெள்ளை மாளிகைக்குள் செல்லலாம். ஏனெனில், அது அவர்களுடைய சொத்து.

இரண்டாவது மாடியில்தான் பிரசித்தி பெற்ற ஜனாதிபதி லிங்கனின் அறை இருக்கிறது. அவர் தமது பதவி காலத்தில் உபயோகித்த கட்டிலும் படுக்கையும் இன்னும் அந்த அறையில் வைக்கப்பட்டிருக்கின்றன.

மேற்படி அறையும் சரித்திரப் பிரசித்தி பெற்றதாகும். ஜனாதிபதி ஆபிரகாம் லிங்கன் அந்த அறையில் தான் அமெரிக்காவில் அடிமைத்தனத்தை ஒழிக்கும் விடுதலைப் பிரகடனத்தில் கையெழுத்திட்டார்.

* * *

சுமார் முப்பது கோடி ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள வெள்ளை மாளிகையில் சகல வசதிகளும் இருக்கின்றன. அது சக்கரவர்த்திகள் வசிப்பதற்கு உகந்த இடம் என்று அமெரிக்க ஜனாதிபதிகளில் ஒருவரே வர்ணித்துள்ளார். அமெரிக்க ஜனாதிபதி நாலு வருஷ காலத்துக்கு ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படும் சக்கரவர்த்திதான் அல்லவா?

எனவே, வெள்ளை மாளிகையில் உள்ள வசதிகள் உலகத்திலேயே செல்வவந்தர்களான அமெரிக்கக் கோடீசுவரர்களுக்குக் கூட இருக்க முடியாது.

அமெரிக்காவில் உற்பத்தியாகியுள்ள எந்த சினிமாப் படத்தையும் எப்போது வேண்டுமாயினும் வெள்ளை மாளிகையில் இருக்க

ஜனாதிபதியின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக பட்லர், தச்சர், கொல்லர் முதலிய தொழில் நிபுணர்களிலிருந்து சாதாரண வேலையாட்கள் வரையில் சுமார் அறுபத்துநாலு பேர்கள் இருபத்து நாலு மணி நேரமும் தயாராக இருக்கிறார்கள்.

ஜனாதிபதியின் பிரத்தியேக உபயோகத்துக்காக இரண்டு டஜன் முதல்தர மோட்டார்கள், ஒரு பெரிய விமானம், ஒரு தனி ரயில் வண்டி, சகல வசதிகளும் அடங்கிய உல்லாசக் கப்பல் முதலியவை எந்த விநாடியிலும் தயாராக இருக்கின்றன.

வெள்ளை மாளிகையில் கோடிக்கணக்கான தொகை பெறுமானமுள்ள பொக்கிஷங்கள் இருக்கின்றன. எனினும் அந்த மாளிகையின் கதவுகள் மூடப்பட்டிருப்பதே இல்லை. சதா சர்வகாலமும் வெள்ளை மாளிகையின் சகல பகுதிகளையும் காவலர்கள் வெகு ஜாக்கிரதையாகக் காவல் புரிந்து வருகிறார்கள். அப்படியிருக்க அதன் கதவுகளை மூடவோ, பூட்டவோ வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?

அமெரிக்க ஜனாதிபதி பதவிக்கு வருவோருக்கு வெள்ளை மாளிகையில் சகல வசதிகளும் இருப்பதால் அவர்கள் வெளியே போகவேண்டிய அவசியமே இல்லை.

ஒரு சமயம் ஜனாதிபதி ட்ருமனுக்கு 'செக்' ஒன்




அன்று பௌர்ணமி. பூரணசந்திரன் தன் குளிர்ந்த ஒளியைப் பொழிந்து தள்ளினான். கடற்பரப்பு தகதகவென்று பளிச்சிட்டது. ஒன்றை ஒன்று தாவிப் பிடித்துப் போட்டியிட்ட அலைகள் வெள்ளிப் பாளமாக விளங்கின.

கடலினிடையே ஐந்தாறு படகுகள், மேலே தாவும் அலைகளையும் லட்சியம் செய்யாது, முன்னேறிச் சென்று கொண்டிருந்தன. அவைகள் இன்னும் மேலேயே போய்க் கொண்டிருந்தன. கடற்கரையைத் தாண்டி ஒன்றிரண்டு மைல் தூரம்கூட அவைகள் வந்திருக்கும்.

வலையோடு படகுக்கு ஒருவராக வந்திருந்தனர். அவர்கள் வலைஞர்கள், கடற் செல்வத்தைக் கரையில் கொண்டு குவிக்கத்தான் வந்திருந்தனர். தங்களையும் தங்களை நம்பியிருந்த மனைவி மக்கள், உற்றார் உறவினர்களின் வயிற்றிற்கு வழிதேடத்தான் வந்திருந்தனர். — மீன் பிடிக்கத்தான்.

அவர்கள் வலையை விரிக்க வேண்டியதுதான் பாக்கி. ஆனால் அந்த சந்திரன் எங்கே! ஏன் உலகமே இருண்டு விட்டது! கரிய மேகங்களைக் கண்டு உலகின் இன்ப துன்பங்களையும், நல்லது கெட்டதையும், கண்டும் காணாது கண் சிமிட்டி வான வீதியில் மங்காச் சிரிப்புடன் வட்ட மிட்ட அந்த வெண்ணிலா இப்பொழுது எங்கே போய் ஒளிந்தது! இப்படி உலகத்தையே இருள் வந்து சூழ வேண்டுமா!

வானம் குமுறிற்று; கரிய பெரிய மேகங்கள் கும்மாள மிட்டன. இடி, மின்னல்; மின்னல் இடி; இடியும் மின்னலும்; அங்கே, கடல் நடுவில் ஒரே பயங்கரம்!

சிறு சிறு தூறல்கள்; காற்று, மழை, பேய்க் காற்று, பெரு மழை, விடாத மழை, சூறாவளிக் காற்று, புயலும் மழையும்!

கடல் கதறிப் பெரு மூச்சு விட்டது. பூமி அலறியது. அங்கே காற்றும் தண்ணீரும் கோரத் தாண்டவம் புரிந்தன.

உலகத்திற்கே அழிவு காலம் வந்து விட்டதா! மண் பரப்பெல்லாம் தண்ணீர்க் காடாய் மாறிவிடப் போகிறதா! எல்லாமே தலைகீழாய் மாறிப் பிரளயமே ஏற்படப் போகிறதா!



படகுகள் கடலில் தத்தளித்தன. வலைஞர்களுக்கு அங்கேயே மயானம் ஏற்பட்டிருந்தது போல் தோன்றியது. கூட வந்த படகுகள் திசைக் கொன்றாகத் தெறிகெட்டு எங்கெங்கோ அடித்து வாரித் தூக்கி எறியப்பட்டன. ஒவ்வொருவரும் தங்கள் உயிரைக் கையில் பிடித்து வைத்துக் கொண்டு நடு நடுங்கிக் கொண்டிருந்தனர்.

இந்த ஊழிக்காலத்தின் முடிவிலே, ஆழியின் கொந்தளிப்பிலே, பேய்க் காற்றின் பேரிரைச்சலிலே தவியாய்த் தவித்தவர்களில் சின்னானும் ஒருவன்.

அப்பொழுதே சின்னான் மனைவி சின்னி சொன்னாள். அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவளை அலட்சியம் செய்துவிட்டு வந்தான்.

அவள் சொன்னதை ஒருகணம் மனத்தில் எண்ணிப் பார்த்தான்.

"அத்தான், இன்னிக்கி என்னமோ பொழுது விடிந்ததிலிருந்து, மானம் மப்பும் மந்தாரமாக யிருக்கு. மழை வரும். சமுத்திரத்திலே போய் அகப்பட்டுக்கப் போறீங்க. நாளை பின்னே போனால் போச்சு! இப்படிச் சம்பாதித்து வாரி வரவேணும். பட்டினி கிடந்தாலும் கிடப்போம், இன்னிக்குப் போக வேணும், அத்தான்! எனக் கென்னமோ பயமாயிருக்கு. நான் சொல்லுவதை இன்னிக்கு ஒருநாள் மட்டும் கேளுங்க."

"ச்சீ, பயந்தாங்கொள்ளி மவள் புத்தியைக் காண்பிக்கிறியே நீ! இந்தச் சின்னான் பதினாலு வயசி லிருந்து கடல்மேல் போய்க்கொண் டிருக்கிறேன். இந்தப் பன்னிரண்டு வருஷமா பார்க்காத மழையைத்தானா இப்போது பார்க்கப் போகிறேன். மழை பெய்யறது என்பது அவ்வளவு சுலபத்திலேயா இருக்கு. நம் ஊர்ப்பக்கம் மழைகூட பெய்யுமா! அதான் வருஷக் கணக்காய் ஆகிப் போச்சு. மழை பெய்திடுமாயில்லே மழை! நல்ல பயம் காட்டுறே சின்னி!"

"அப்படி யெல்லாம் நினைக்கப்படாதீங்க! மழை வராதுன்னு சொல்லக்கூடாது. நின்னு தான் பாருங்களேன், மழை பெய்யுதா இல்லையா என்பதைத்தான் பாருங்களேன்!" என்றாள் சின்னி.

"சின்னி, நீ பெரிய புத்திசாலிதான் போ! பெண் பிள்ளை பேச்சைக் கேட்டு நடக்கும் ஆண்பிள்ளை நான் இல்லை. போ,போ, உன் வேலையைப் பார்த்துக் கொண்டு! நான் போகத்தான் போகிறேன்!" என்றான் சின்னான்.

ஆமாம், சின்னி தீர்க்கதரிசி தான். அவள் சொன்னபடியே நடந்து விட்டது. மழை மட்டு மல்ல, பெரு மழையும், பேய்க் காற்றுமாக வல்லவே வா வந்து சேர்ந்து விட்டது.

சின்னான் முட்டாள். அவன் அவளிடம் பேசி விட்டு வந்த வீறாப்புப் பேச்சுகள் எல்லாம் கடலில் கரைந்த களிமண்ணாய்ப் போய்விட்டன. அவன் மனம் அலை கடலைப் போல் தத்தளித்துத் தவித்தது.

அவனும் சின்னியும் தாம்பத்திய வாழ்வில் ஈடுபட்டு இரண்டு வருஷங்கள்கூட இன்னும் சரியாக ஆகவில்லையே! அதற்குள்ளாகவா சின்னனின் விதி இப்படி ஆகவேண்டும்! அநாதைப் பிணமாய் அலைகடலின் அடித்தளத்தில் அழுந்தி, புதைந்து அழிந்து போகத்தானா அவன் பிள்ளையாய்ப் பிறந்தான். பிறந்தானே, கல்யாணம் என்று சின்னியை வேறு கட்ட வேண்டுமா! வாழ்நாள் பூராவும் அவளை அழவிடப் போகிறானே!

ஒவ்வொன்றையும் நினைக்க நினைக்கச் சின்னனுக்கு அழுகை வந்தது. அவன் அழுகிறான் என்பதே தெரியாமல், அவனே தண்ணீர் மயமாகியிருந்தான். கீழேயும் தண்ணீர், மேலேயும் வானம் பொத்துக் கொண்டு நீர்வீழ்ச்சியாய் விடும் தண்ணீர். இரண்டுக்கு மிடையில், நாலா புறமும் சுழன்றடிக்கும் புயற் காற்று.

சின்னன் அங்கேயே, கடலிலேயே செத்து மடிய வேண்டியவன்தானா!

"பகவானே, நான் செத்துப் போகிறேன். அதற்கு முன் ஒரு வரம் கொடு. சின்னியின் ஆசை முகத்தை ஒரே ஒரு

இருண்ட வானம் தெரிந்தது; இடியோசை தெரிந்தது; மின்னல் தெரிந்தது; கடலும் காற்றும் கோரத் தாண்டவத்தில் உறவு கொண்டாடியது தெரிந்தது; பேரிரைச்சலும், பெரு மழையும் தெரிந்தது; கையிலும், காலிலும், உடலிலும் ஏன் உள்ளத்திலும் கூட அவனுக்கு வலி தெரிந்தது.

நீந்தினான்; வெகுண்டெழுந்த நீலக் கடலிலே, தன்னந் தனியனாய், உயிர்மேல் உள்ள ஆசையை விட முடியாதவனாய், சின்னன் நீந்தினான்.

அவன் கைகள் ஓய்ந்தன; கால்கள் ஓய்ந்தன. உள்ளமும் உடலுமே ஓய்ந்து போயின.

அவன் தன்னை மறந்தான்; உணர்வை மறந்தான்; உயிர், உயிருக்குயிரான சின்னி எல்லாவற்றையுமே அவன் மறந்தான். எங்கோ ஆகாயத்துக்கும், பாதாளத்துக்குமாக மேலும் கீழும் அவன் போய் வந்து கொண்டிருந்தான்.

அவன் உடலில் உயிர் இருக்





ஒருவர்:—எனக்கு வர வர ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. எதையும் ஞாபகம் வைத்துக் கொள்ள முடியவில்லை.

மற்றவர்:—எனக்கும் அதே மாதிரிதான். கொஞ்சம் வித்தியாசம். நான் எல்லாவற்றையும் அப்படியே ஞாபகம் வைத்துக் கொண்டு கஷ்டப் படுகிறேன். எதை மறந்து விடுவது என்றே தெரியவில்லை!

ஓடுங்கள். பட்டணத்தைப் பார்க்க ஓடுங்கள். எங்காவது போய் ஒண்டிக் கொள்ளலாம்" என்று மற்றவர்கள் பேசிக் கொண்டது சின்னியின் காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து எல்லாருமே ஓடினார்கள்; சின்னி மட்டும் அந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை.

"அடி, அசட்டுப் பெண்ணே! ஏன் உட்கார்ந்திருக்கிறாய்! இந்தக் காற்று மழையில் சாகப் போகிறாயா, நீ! சீக்கிரம் கிளம்பு" என்று பக்கத்து வீட்டுக் கிழவி அவளைத் துரிதப் படுத்தினாள்.

"பாட்டி, நான் வரவில்லை. நான் வந்து என்ன செய்யப் போகிறேன்! அத்தான் கடல் மேலே வலை வீசப் போயிருக்கு. அது அங்கே செத்து மடிய, நான் மட்டும் பிழைத்து வாழணுமா! நீங்கள் போங்கள். அத்தான் வராமல் நான் இங்கிருந்து கிளம்பப் போகிறதில்லை"—சின்னி கண் கலங்கச் சொன்னாள். எங்கோ கடலின் தொலை தூரத்தில், குமுறி எழும் அலைகளில், உயிருக்கு மன்றாடும் அவள் அருமைக் கணவன் சின்னானைப் பற்றி நினைக்க, நினைக்க அவளுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. அவள் வேண்டிய மட்டும் அழுது தீர்த்தாள், உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்காமலே.

அதற்குள் இரண்டு மூன்று பெண்களாகச் சேர்ந்து, அவளைக் கெட்டியாகப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்கள்.

கடலோரக் குடிசைகளிலே, காலமெல்லாம் வாழ்ந்து, குளிர், மழை, வெய்யில், காற்று, பனி எல்லாவற்றையும் கண்டு அனுபவித்துப் பழகிப் போயிருந்த அவர்கள் இப்படித் திடீரென்று, கண்டும், கேட்டுமிராத புயல் மழைக்கு அஞ்சி, தங்கள் தங்கள் உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ள குழந்தை குட்டிகளுடன் ஓடினார்கள். போட்டதைப் போட்டபடி போட்டுவிட்டு ஓடினார்கள்.

அப்பாடா, ஆபத்து நீங்கி விட்டது! மலை போன்ற பயம், பனிபோல நீங்கி விட்டது. அவர்கள் நிம்மதியாக மூச்சு விட்டனர். பத்திரமாகப் பாதுகாப்பளிக்க அந்தப் பிரம்மாண்டமான பொறையாறு சத்திரம் அவர்களுக்கு உதவியது. எந்த மகான், எப்பொழுது கட்டி வைத்துவிட்டுப் போனாரோ! எல்லாருமே அந்தச் சத்திரத்தில் அடைக்கலம் புகுந்தனர்.

பொழுது விடிந்தது; மழை ஓய்ந்தது; காற்று நின்றது. எங்கும் ஒரே வெள்ளக்காடாய் இருந்தது. தென்னை, வாழை எல்லாமே அடி சாய்ந்து போயின. வானுற ஓங்கி நின்ற, மற்ற மற்ற மரங்கள் எல்லாம் கீழே சாய்ந்து கிடந்தன.

சத்திரத்தில் இருந்த அவர்கள் அப்படியே பத்திரமா யிருந்தனர். அவர்கள் வாழ்ந்த குடிசைகள், மற்ற மற்றப் பொருள்கள் எல்லாம் என்ன ஆயினவோ! ஆவதென்ன! எல்லாவற்றையும் கடல் விழுங்கி யிருக்கும். நேற்று வரை ஜீவன் நிறைந்திருந்த அந்த இடம், இன்று ஒரு மயான பூமியாகத்தான் மாறியிருக்கும்.

ஒரு வாரம் சென்றது.

அவர்களில் யாரோ ஒருவன் போய்ப் பார்த்து வந்தான். "ஐயோ, எல்லாமே அழிந்து போய் விட்டன. வேறு இடம் தேடிப் போக வேண்டியதுதான். புதுக் குடிசை, புதுப் படகு, புதுப் புது சாமான்கள் எல்லாமே நமக்குப் புதிசாக வேண்டியதுதான்" என்றான் அவன்.

இயற்கையின் இந்த நாச வேலை, உழைத்துப் பிழைத்துக் கொண்டிருந்த அவர்களை, மோசம் செய்து, ஓட்டாண்டிகளாக்கி விட்டது. செய்வது இன்னதென்று தெரியாமல் திகைத்தனர்.

சின்னி மட்டும் சின்னானை நினைத்து, நினைத்து அழுதுகொண் டிருந்தாள். அவளைப் போலவே மற்றும் சில பெண்கள், கடலில் சென்ற தங்கள் வீட்டுக்காரர்களை எண்ணிக் கண்ணீர் விட்டனர்.

கடலை நம்பி, தங்கள் உழைப்பை நம்பி, வாழ்ந்த நாளெல்லாம் போய், பிறர் தயவை நாட வேண்டிய நிலைக்கு, அவர்கள் எல்லாருமே வந்திருந்தனர். யார் உதவப் போகிறார்களோ!

* * *

சின்னானுக்குப் பிரமை நீங்க வெகு நேரம் பிடித்தது. தானிருப்பது கடலின் அலைகளினிடையேயா அல்லது பூமியின் பரப்பிலேயா என்பதை அவனால் எளிதில் நிர்ணயம் செய்துகொள்ள முடியவில்லை. ஏதோ ஒரு புதுமையின் சூழ்நிலையில் இருப்பதுபோல்தான் அவனுக்குத் தோன்றியது.

சிறுகச் சிறுக உணர்வு பெற்று, கண் விழித்துப் பார்த்தபோது, அவனைச் சுற்றி யார் யாரோ இருந்ததை அவன் அறிந்தான். அவர்களை நன்றாகப் பார்த்தான். எல்லாருமே முன்பின் அறியாத புது மனிதர்கள்தாம்.

ஒரு நிமிஷம் அவன் திகைத்தான். "நான் எங்கே இருக்கிறேன்!" — சின்னான் கத்தினான். அவன் வியப்பு அடங்கவில்லை.

"தம்பி, அலட்டிக் கொள்ளாதே. நீ உயிர் பிழைத்ததே தெய்வாதீனம்தான். என்னுடைய இந்த நாய் இல்லாவிட்டால், நீ செத்துப் போயிருக்க வேண்டியவனே. கடற்கரையில் ஒதுங்கிக் கிடந்த உன்னை இதுதான் எங்களுக்குக் கொண்டு வந்து காண்பித்தது. நாங்களும் சமயத்தில் வந்ததினால், நீ பிழைத்தெழ உதவி செய்ய முடிந்தது" என்று நரை, திரை முதிர்ந்த கிழவர் ஒருவர் அவ

ளிடம் சொன்னார். சின்னான் அவர் பக்கத்தி லிருந்த, கூரிய அறிவு மிக்க அந்த நாயை நன்றி நிறைந்த கண்களோடு பார்த்தான்.

“மற்றவர்கள் எல்லாம் எங்கே!”—இது சின்னான் கிழவரைப் பார்த்துக்கேட்ட அடுத்த கேள்வி.

“தம்பி, கவலை வேண்டாம். உன்னைப் பார்த்ததும், நாங்கள் இந்தக் கரை பூராவும் ஓடினோம். அங்கங்கே ஒதுங்கி யிருந்தவர்கள் எல்லாரும் பிழைத்து விட்டார்கள். ஒருவரும் சாகவில்லை” என்றார் கிழவருக்கு அருகில் இருந்த மற்றொருவர்.

சின்னான் கண்கள் பிரகாசித்தன. உள்ளத்தின் நிறைந்த மகிழ்ச்சி அவன் முகத்தில் தெரிந்தது.

இப்பொழுது அவன் கடலில், அலைகளிலே சிக்கி, தவித்து, தத்தளிக்கவில்லை. உயிர் பிழைத்து எழுந்து விட்டான். மற்றவர்களும் உயிர் தப்பி விட்டார்கள். அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

நடந்ததெல்லாமே அவனுக்குக் கனவு போலத் தோன்றியது. அவன் உள்ளத்தோடு இணைந்து, பிணைந்திருந்த, சின்னி அருகில் இல்லாதது, கன வல்ல என்பதை அவனுக்குத் தெரிவித்தது. மற்ற தன் தோழர்களைக் கட்டி யணைத்துக் கொண்டான் அவன். அவன் உள்ளத்து உணர்ச்சிகளை அவ னன்றி வேறு யாராலும் அறிய முடியாதுதான்.

சின்னானும், அவன் நண்பர்களும் அந்த நல்ல மனிதர்களிடையில், ஒரு வாரத்துக்கு மேல் தங்கி னார்கள். வாயார வாழ்த்தி, நன்றி செலுத்தி விட்டு, அங்கிருந்து விடை பெற்றுக் கொண்டனர்

புயலால் தாக்குண்டு, அவதிக்கு ஆளாகிய மக்களுக்குப் பொறையாறில் சில புண்ணிய வான்கள் சாப்பாடு போட்டுக் காப்பாற்றுகிறார் கள் என்று அவர்கள் வழியில் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். அங்கே அவர்கள் விரைந்தனர்.

ஊரில் கூட்டம் நிறைந்து நின்ற இடத்தை அவர்கள் தொலைவிலிருந்தே கவனித்தனர். ஆம், அங்கேதான் சாப்பாடு போடுகிறார்கள். அவ் விடத்தை நோக்கி அவர்கள் நடந்தார்கள்.

கூட்டத்தை நெருங்கியதும் சின்னான் தன் ஊர் ஜனங்களில் சிலரைக் கண்டான். மற்றவர்களும் அங்கேதானிருக்க வேண்டும். அவன் அருமைச் சின்னியும் அங்கே இருக்க வேண்டுமே!

சின்னான் கண்கள் ஆவலோடு கூட்டத்தைச் சுற்றி வட்டமிட்டன. அதோ, அதோ! சின்னியை அவன் கண்டுகொண்டான்.

“சின்னி!” — அவன் தொண்டை கிழிய ஆவலோடு கத்தினான்.

“அத்தான்!”—சின்னி ஓடி வந்தாள்.

சின்னான் அவளை அணைத்துக்கொண்டு கண்ணீர் விட்டான். சற்று நேரம் அவனுக்குப் பேச வாய் வரவில்லை. அவளும் அப்படித்தானிருந்தாள்.

“அத்தான், அப்பவே சொன்னேனே கேட்டீங் களா! இப்படி என்னைத் தவிக்க விட்டுவிட்டுப் போயிட்டீங்களே! என் ராஜாவைத் திரும்பவும் பார்க்க முடிந்ததே! கடவுள் கண் திறந்து விட்டார். என் பிரார்த்தனை வீணாகவில்லை”

பலித்து விட்டேன். எப்படி எப்படியோ கஷ்டப் பட்டுப் பிழைத்து வந்து விட்டேன். கடவுள் நம்மைச் சேர்த்து வைத்து விட்டார்"—இப்படி சொல்லும்போது, சின்னான் கண்கள் கலங்கின. அடுத்த கணம் அவன் வானத்தை நோக்கிக் கையெடுத்து கும்பிட்டான். சின்னியும் கைகூப்பி னாள். அவனுக்கு நடந்தது எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான்.

"புயலோடு மழையும் வந்து, நம்மைப் போன்ற சிலரைக் கஷ்டப்படுத்தி விட்டாலும், கோடி கோடி மக்களுக்கு மழையினால் நன்மை விளைந் திருக்கு. நெல்லும், மணியும் இனி நாட்டில் நிறை யக் கிடைக்கும். அடுத்த வருஷம் நாட்டில் பஞ்ச மிருக்காது. நான் சொல்றபடி நடக்கிறதா என்பதைத்தான் பாரேன்" என்றான் சின்னான் தான் பட்ட அவதியை எல்லாம் மறந்து.

"ஆமாம், அத்தான், நம் கஷ்டம் இப்போ நீங்கியதுபோல், மற்றவர்கள் கஷ்டமும் நீங்கி விடும்" என்றாள் சின்னி. அவளடைந்த மகிழ்ச் சியைச் சொல்லி முடியாது. அவள் கண்களில் ஒரு புதிய ஒளி பிறந்தது.

உயிர் பிழைத்துவந்த சின்னானின் மற்ற நண் பர்களும் தங்கள் மனைவி மக்கள், சுற்றத்தாரை இனம் கண்டுகொண்டு, மகிழ்ச்சி யடைந்தனர்.

புண்ணியவாளர்கள் போட்ட சாப்பாட்டைச் சாப்பிட்டுப் பசியைத் தணித்துக் கொண்டனர், சின்னானும் சின்னியும்.

"சின்னி, வா, வா, போவோம். இனியும் இந்த சோம்பேறி வாழ்க்கை கூடாது. நம் புது வாழ்வை அமைத்துக் கொள்வோம். சர்க்காரில், குடிசை கட்டிக் கொள்ளவும், படகு கட்டிக் கொள்ளவும் பணம் கொடுக்கிறார்களாம். துணி மணிகளும் கொடுக்கிறார்களாம். சுதந்தர சர்க் கார் என்னதான் கொடுக்க மாட்டார்கள்! நம் சுகத்துக்காகத்தானே சர்க்கார் நடக்கிறது" என்று அவள் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனான் சின்னான். சின்னியும் மகிழ்ச்சி பொங்கும் உள்ளத்தோடு கணவனைப் பின் தொடர்ந்து சென்றாள்.

இந்தச் சந்தோஷ தம்பதிகளைப் பின் தொடர்ந்து மற்றவர்களும் போனார்கள். அவர்கள் எல்லாருடைய வாழ்க்கையும் மலர்ந்தது!

# படித்துப் பாருங்கள்!

# மதிப்பு எதற்கு?

**டி. ஜி. எஸ்.**

வண்டியில் ஒவ்வொருவர் டிக்கெட்டையும் பரிசோதித்து வந்த நாராயணன் கடைசியாக ராகவனிடம் வந்து, "டிக்கட்!" என்று கையை நீட்டினான்.

ராகவன் பையில் கையை விட்டான்; திடுக்கிட்டான். பின்னர் கோட்டின் மற்றப் பைகளிலும் கையை விட்டுத் துழாவினான்.

"டிக்கெட்டைக் காணோமா, என்ன அண்ணா? ஒரு வேளை பர்ஸில் வைத்திருக்கிறாயோ என்னமோ!" என்றாள் அவன் அருகில் அமர்ந்திருந்த கமலா.

"பர்ஸில்தான் ஞாபகமாய் வைத்தேன்; இப்போது பர்ஸையே காணோம்!" என்றான் ராகவன். இருக்கையை விட்டெழுந்து, பெட்டி, ஹோல்டால் இரண்டையும் அண்ணனும் தங்கையுமாய்க் குடைந்து தேடினர். பர்ஸை மட்டும் காணவில்லை.

சாமான்கள் வைக்கும் பலகையை ஒரு கையால் பிடித்தபடி அவர்களைக் கவனித்த நாராயணன் "எந்த ஊருக்கு ஸார் டிக்கட்டு வாங்கினீர்கள்?" என்று கேட்டான்.

"நாங்கள் சென்னைவரை போகிறோம், ஸார்! திருச்சியில்தான் வண்டி ஏறினோம். பத்திரமாய்த்தான் வைத்தேன். எப்படிப் போய்விடும் அது? பர்ஸில் வேறு இருபது ரூபாய் வரை பணமிருந்தது" என்று குழப்பத்துடன் சொன்னான் ராகவன்.

"டிக்கட் இல்லாமல் நீங்கள் மேற்கொண்டு பிரயாணம் செய்ய முடியாது ஸார், தயவு செய்து நீங்கள் விழுப்புரத்தில் இறங்கிவிடுங்கள்" என்றான் நாராயணன்.

"நான் அவசியம் சென்னைக்குப் போக வேண்டும்" என்றான் ராகவன் பரிதாபமாக.

"நீர் டிக்கட்டுகள் வாங்கவில்லை யென்று நான் சொல்லவில்லையே! ஆனால் என் கடமையை நானும் செய்ய வேண்டுமல்லவா?"

ராகவன் செய்வதறியாது திகைத்தான். பணம் பூராவும் பர்ஸிலிருந்ததே தவிரக் காலணாகூட வெளியிலில்லை.

"விழுப்புரம் நெருங்கி விட்டது, ஸார்! இறங்குவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்றான் நாராயணன்.

இத்தனை நேரம் பொறுமையாயிருந்த கமலா அச்சமயம் "ஏன் ஸார்! இறங்குவது தவிர வேறு வழி கிடையாதா?" என்றாள்.

"இருக்கிறது அம்மா! காசு கொடுத்தால் விழுப்புரத்திலிருந்து உங்கள் இருவருக்கும் டிக்கட் எழுதிக் கொடுக்கிறேன்" என்றான்.

"காசு இல்லை; இந்த மோதிரம்தான் இருக்கிறது."

"நான் மார்வாடி இல்லை, அம்மா."

"மார்வாடிக்காவது பொன்னைப் பார்த்தால் இரக்கம் பிறக்கும்; அதுகூட இல்லை உங்களுக்கு" என்றாள் கமலா.

"என்ன கமலா இது? அவர் ஏதாவது வித்தியாசமாய் நினைத்துக் கொள்ளப் போகிறார்" என்றான் ராகவன்.

"வித்தியாசம் ஒன்றும் இல்லை ஸார்! உங்களுக்கு அவசரமாய்ப் போக வேண்டும். ஆனால் பணம், டிக்கட் இரண்டுமில்லை! மோதிரத்தைத் தான் கொடுங்களேன். நான் உங்களுக்கு டிக்கட் எழுதிக் கொடுக்கிறேன். நீங்கள் சென்னை அடைந்ததும் பணத்தை அனுப்பி மோதிரத்தை மீட்டுக் கொள்ளுங்கள்" என்றான் நாராயணன்.

கமலா தன் மோதிர விரலில் போட்டுக் கொண்டிருந்த புது மோதிரத்தைப் பரபரப்புடன் கழற்றினாள்.

ராகவன் தன் விலாசத்தைச் சொன்னான். நாராயணன் விலாசத்தைக் குறித்துக் கொண்டு மோதிரத்தை வாங்கிப் பார்த்தான்.

பின்னர், "என்னிடம் உரை கல் இல்லை. இருந்தாலும் பரவாயில்லை. டிக்கட் பணம் தாளாமலா போகிறது?" என்று புன்சிரிப்புடன் சொல்லியபடியே அதைத் தன் சுண்டு விரலில் போட்டுக் கொண்டான்.

"டிக்கட் கலெக்டர் ஸார்! உங்களை ஏமாற்ற எனக்கு விருப்பமில்லை. அந்த..." என்று ராகவன் சொல்ல வாரம்பித்தபோது, "அண்ணா! உனக்கு விழுப்புரத்திலேயே இறங்கிவிட ஆசை போலிருக்கிறது! இதோ ஸ்டேஷனும் வந்துவிட்டது. ஊம். ஹோல்டாலைச் சுற்றிக் கட்டு" என்று சொல்லியபடியே எழுந்தாள் கமலா.

நாராயணன் கல கல வென்று சிரித்தான். பின்னர், "வேண்டாமம்மா! இதோ நான் டிக்கட் எழுதியாய் விட்டது" என்றான்.

விழுப்புரத்தில் நாராயணன் மட்டும்தான் இறங்கினான். கமலாவை ஒரு தரம் கடைக் கண்ணால் பார்த்துவிட்டுத்தான் இறங்கினான்.

வண்டி விழுப்புரத்திலிருந்து புறப்பட்டதும், "கமலா! உன் காரியம் கட்டோடு



மாஜிஸ்திரேட்:—என்ன, இந்த ஒரு மாசத்துக்குள் ஐந்து பேர்கள் மீது காரை ஏற்றியிருக்கிறீர்கள்?

காரின்சொந்தக்காரர் (கோபத்துடன்):—இல்லை. நாலு பேர்கள் மீதுதான் ஏற்றியிருக்கிறேன். ஒரே ஆசாமியின் மீது இரண்டு தடவை ஏற்றி விட்டேன்!



இரட்டைப் பிள்ளைகள் (மாமாவிடம்) :—இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்தது ரொம்ப சங்கடமாயிருக்கிறது, மாமா!

மாமா (ஆச்சரியத்துடன்) :—ஏன்?

இரட்டைப்பிள்ளைகள் :—எங்களில் யாராவது ஒருவன் விஷமம் பண்ணினால், அம்மா சந்தேகத்துக்கு இட மில்லாமல் இரண்டு பேரையும் அடித்து விடுகிறாள்!

பிடிக்கவில்லை. அந்த மனிதன் என்ன நினைத்துக் கொள்வார்" என்றான் ராகவன்.

"ஒன்றும் நினைத்துக் கொள்ள மாட்டார். நம் சாதுர்யத்தை மெச்சிக் கொள்வார். அதுவுமில்லாமல் அவர் பணத்தை நாம் நாளையே அனுப்பி விட்டால் போகிறது!" என்றான்.

★

தங்கையைப் பட்டணத்தில் கொண்டு போய் வைத்துக் கொண்டால் வரன் தகையாதா? என்ற எண்ணத்துடன்தான் அவளைத் திருச்சியிலிருந்து கூடவே அழைத்து வந்திருந்தான் ராகவன்.

ஆனால் வந்து ஆறு மாதங்களாகியும் ஒரு வரனும் தகையவில்லை. வந்த இரண்டு மூன்று பேர்களுக்குப் பெண் பிடிக்கவில்லை. அத்துடன் கமலாவுக்கும் அவர்களைப் பிடிக்கவில்லை. அன்று டிக்கட் கலெக்டர் நாராயணனைப் பார்த்தபோதே அவள் உள்ளம் அவனிடம் பறந்தோடிப் போய்விட்டது.

ராகவன் சென்னை சேர்ந்ததுமே நாராயணன் டிக்கட்டுக்காகக் கொடுத்த பணத்தை அவனுக்கு மணியார்டர் செய்து விட்டான். அதைப் பெற்றுக் கொண்டு எழுதிய கடிதத்தில், "மோதிரம் கையை விட்டுக் கழற்ற வரவில்லை. முடிந்ததும் இன்ஷூர் பண்ணி அனுப்புகிறேன். உங்கள் குறும்புக்கார தங்கையை மிக விசாரித்ததாய்ச் சொல்லவும்" என்று குறித்திருந்தான் நாராயணன்.

அப்புறம் அந்த ஆறுமாத காலத்தில் அவனிடமிருந்து கடிதமே வரவில்லை. கமலாவின் மோதிரமும் கிடைக்கவில்லை.

அந்த மோதிரத்துடன் கமலாவின் உள்ளமும் அவனிடம் பத்திரமாயிருந்தது. அந்த நிலையில் அவளுக்கு வேறு யாரைப் பிடிக்கும்?

ஒரு நாள் ராகவன் ஆபீஸ் சக குமாஸ்தா ஒருவர் தன் நெருங்கிய உறவுப் பையனொருவன் லீவில் வந்திருப்பதாயும் அவனுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை என்றும் சொன்னதின் பேரில் ராகவன் அப் பையனை அழைத்துக் கொண்டு வரும்படி அவரைக் கேட்டுக் கொண்டான். அப்படியே மறுநாள் வருவதாக அவரும் சம்மதித்தார்.

தன்னைப் பார்க்க இன்னொரு பையன் வரப் போகிறானென்ற செய்தி கமலாவுக்கு மகிழ்ச்சியை யளிக்கவில்லை. தலைக் கோணை வகிட்டை நேர் வகிடாக்கிக் கர்நாடக பாணியில் பின்னிக் கொண்டாள். அவள் நிறத்துக்குக் கொஞ்சமும் ஒவ்வாத நீல நிற வாயில் புடவை ஒன்றைக் கட்டிக் கொண்டாள்.

தன்னை அந்தக் கோலத்தில் பார்த்தால் எந்த வாலிபனின் இன்பக் கனவும் சிதைந்து விடும் என்பதைத் தன்னைக் கண்ணாடியில் பார்த்து ஊர்ஜிதம் செய்து கொண்டாள்.

ஆயிற்று; அதோ குதிரை வண்டியும் வந்து விட்டது வாசலுக்கு. முதலில் இறங்கியவர் ராகவன் சக குமாஸ்தா ஜகந்நாதன் தான். அதற்கு அடுத்தாற்போல் இறங்கியது, யாரது? நாராயணனா? ஆம்; அவனே தான்! அன்று டிக்கட் கலெக்டர் உடுப்பு அணிந்திருந்தான். இன்று ஷர்ட்டும், மல் வேஷ்டியுமாய்க் காட்சி தந்தான்!

கமலா அப்படியே திகைத்து விட்டாள்.

நாராயணனுக்கு எந்த வீட்டுக்குப் பெண் பார்க்கப் போகிறோம் என்று முதலிலேயே தெரிந்திருந்தது. ஆகையால் கமலாவின் முகத்தைக் கண்டு அவன் திடுக்கிடவில்லை.

"இவரை எனக்கு முன்னாலேயே பரிச்சயமுண்டு" என்றான் ராகவன் ஜகந்நாதனிடம்.

கமலா டிபன், காப்பி கொண்டு வந்தாள். அவள் உள்ளத்தில் குதூகலம் பொங்கி வழிந்தது. இருப்பினும் தான் வேண்டுமென்றே செய்து கொண்ட அலங்காரத்தில் அவளுக்கு வருத்தமிருந்தது.

"இந்தா அம்மா உன் பித்தளை மோதிரம். நீ இதை அன்று திருச்சி ஜங்ஷனில் பித்தளை மோதிரங்கள் விற்பவனிடம் ஓரணா கொடுத்து வாங்கியதைப் பார்த்துக் கொண்டுதானிருந்தேன். நேரிலேயே கொடுக்க வேண்டுமென்று தான் இத்தனை நாள் வைத்துக் கொண்டிருந்தேன்......" என்று சொல்லி மோதிரத்தைக் கழற்றினான் நாராயணன். கமலா வெட்கத்துடன் உள்ளே ஓடிவிட்டாள்.

அடுத்த மாதம் அவர்களுக்குத் திருமணம் நடந்தேறியது. "கமலா! உன்னைப் போலப் பித்தளையைப் பொன்னாக்கும் சாமர்த்தியமுள்ள மனைவி எல்லோருக்கும் கிடைப்பது கடினம் தான்!" என்றான் நாராயணன்.

"பித்தளை என்றும் பித்தளை தான். அதைப் பொன்னாக்குவது தங்களைப் போன்றவர் உள்ளம்தான்! உங்கள் உள்ளம் தெரியாமலிருந்தால் அப்படிப் பித்தளை மோதிரத்தை அன்று உங்களிடம் அடகு வைத்திருப்பேனா?" என்று சொல்லிச் சிரித்தாள் கமலா.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116 - 119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

Regd. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*